ஆஞ்சனேயன்—அஞ்சனை புத்திரன். அநுமானிற்காண்க.

ஆடகமாடம்— (1)மலைநாட்டிலுள்ள இரவிபுரம் (2) திருவநந்தபுரமெ ன்னுந் திருமாலினிருக்கை.

ஆடகேசுவரர்—பாதாளாதி பதியாய் ஆங்குள்ள கோடியுருத்திரர்கட் கிறைவர்.

ஆடி—ஓரசுரன். பிரமனைநோக்கி யி றவாவரங்கேட்டு, சந்திரதேவதா கமான நக்ஷத்திரத்தில் உருத்திர தேவதாகமானமுகூர்த்தத்தில் பெ ருமழைபெய்கையில் கபடவடிவே ற்றிருக்கையில் இறக்கவரமேறறு, உமாதேவி பிரிந்திருக்கையிற் சிவ சந்நிதியிற் சென்று அம்மையாருரு வேற்று மயக்கயத்தனித்துச் சிவ பெருமானாற் கொல்லப்பட்டவன்.

ஆடுகோட்பாட்டுச் சேரலாதன்—எட் டுத்தொகைநூலு ளொன்றானபதி ற்றுப் பத்தில் ஆறும்பத்தினைத் தனமீது ·காக்கைபாடினியார் நச் செள்ளையார் என்னும் நல்லிசைப் புலமை மெல்லியலார் பாடியத ற்காக அவருக்கு அணிகலனுக்கு ஒன்பது துலாம் பொன்னும் நூறா யிரம் பொற்காசும் பரிசில்தந்த ஒருசேரராசன். முப்பத்தெட்டா ண்டு அரசுவீற்றிருந்தவன்.

ஆடுதுறைமாசாத்தனார்—சோழன் கு ளமுற்றத்துத் துஞ்சிய கிள்ளிவள வன், இறந்தபொழுது அவனது பிரிவாற்றாதுபுலம்பிப்பாடிய ஒரு புலவர்.[புறநா]

ஆணிமாண்டவியர்—மகாதவங்களைச் செய்த ஒரு பிரமருஷி. இவர்தவ ஞ்செய்துகொண்டிருக்கையில்ஒரு நாள் சிலதிருடர் தம்மை இராஜ சேவகர் துரத்திக்கொண்டு வந்த மையின், சேவகர் அக்கள்வரைப் பற்றிக்கொண்டது மன்றி இவர் பாலும் ஐயமுற்று உடன்கொண் டு இவர் யாவருந் திருடரென அர சனுக்குணர்த்த, அவன் எல்லோ ரையுங் கழுவேற்றக்கட்டளையிட் டனன். அங்ஙனமே பிறகள்வரு டனிவருங் கழுவேற்றப்பட்டவர். ஆயினும் சிறிதும் மனங்கலங்கா து பிரமநிஷ்டையில் சிலகால மிருப்ப அரசன இவரது தன்மை யை யறிந்து அதினின்று விலக்கி த் தனகுற்றத்திற்கு மன்னிப்புக் கேட்டு விடுத்தபிறகு, மேலுந்தவ ஞ்செய்து எவ்வுலகங்கட்குஞ் செ ன்று சஞ்சரித்துவருகையில், ஒரு நாள் யமலோகத்தை யடைந்து ய மதருமனைத் தரிசித்து, தருமத்தவ றாது நடந்த எனக்கு இத்தகைய கொடூரதண்டனை யெதனாலுண் டாயது எனவினவ, யமதருமன் நீ உன் இளம்பருவத்திலே தும்பி யைப்பற்றி அதன்வாலில் ஈர்க்கி னைப்புகுத்தினை, அதனாலுனக்கித் தகைய தண்டனை நேர்ந்தது என க்கூற, இவர் வெகுண்டு, பிறந்தது முதற் பன்னிரண்டுவருடமெல்லையும் இளம்பருவமாகலின் அவன் செய் வனயாவும் அறியாமற் செய்தவை யே, அவனுக்கு அதனால் எப்படி ப்பாவமுண்டாகலாம். இதனைச்சி றிதும் யோசியாது இவ்வளவு கு ரூரமான தண்டனை விதித்த நீ பூலோகத்திற் சூத்திரனாகப் பிறக் கக்கடவையெனச் சபித்தவர். இது காரணமாகயமன் விதுரனாகத்தோ ன்றினன். விதுரனிற் காண்க.

**ஆதனழிசி**--ஒல்லையூர்தந்தபூதப்பாண்டியன் நேயருளொருவன் [புறநா]

**ஆதனுங்கன்** — கொடையாளியான வேங்கடத்தலைவன். இவன் அருமை பெருமைகளைக் கள்ளில் ஆத்திரையனாரெனும் புலவர் புறநானூற்றிற் பாடியிருக்கின்றனர்.

**ஆதனோரி**----கடையெழுவள்ளல்களிலொருவன். ஓரி-வல்வில்லோரியென்றுஞ் சொல்லப்படுவன். கொலவிமலையும் அதைச்சார்ந்த நாடும் இவன் அரசுரிமையிலிருந்தவை. இவனைப்பாடிய புலவர் பரணர், கழைதின்யானையார் முதலினோர்.

**ஆதிரத்தி**—பராசத்தியி லாயிரத்தொருகூறுகொண்டது. ஆன்மாக்கட்கு விஷய சுகத்தைப்பொருத்தும் ஆணவமலம் பக்குவமாமாறு செய்யுந் தன்மையது.

**ஆதிசாரம்**— சிற்பநூல்கள் முப்பத்திரண்டனுளொன்று.

**ஆதிசேடன்**—காசிபருக்குக் கத்துருவையிடத்துதித்த நாகர்களில் மூத்தவன். இவன் தன் தாய்க்கு விநதையென்னுஞ் சககளத்தி செய்த சூதினைச்சகியாது கடுந்தவமிருந்து பிரமனாற் பூபாரந் தாங்கும் பலத்தை யடைந்தவன். மீண்டும்கடவுளருளால் திருமாலுக்குச் சயனமாயவன். இவனுக்கு ஆயிரம் பணாமுடிகளும் இரண்டாயிரம் நாக்களுமுளவென்பர். இவனே பிருகுசாபத்தால் பலராமனாக அவதரித்தவன்.

**ஆதிதேயர்**—தேவர்கள். அதிதிவயிசத்துதித்தவர்.

**ஆதித்தர்**—காசிபருக்கு அதிதியிடம் பிறந்த தாதா மித்திரன் அரியமன் இந்திரன் வருணன் அம்சுமஞ்சன் பகன் விசுவந்தன் பூஷா சவிதா துவஷ்டா விஷ்ணு என்னும் பன்னிரு புத்திரர். இவர்கள் சிருட்டியிலிச்சை வையாது பிரமனாணையை யிகழ்ந்தவர்களாகலின் மநுவந்தரங்கடோறும் பிறக்கும்படி சபிக்கப்பெற்றவர்கள்.

ஆதித்தர் சோதிரூபமும்சூரியன் அக்கினி ரூபமுமுடைமையின் துவாதசாதித்தர் வேறு உலகிற்குப் பிரகாசத்தினைச்செய்யும் சூரியன் வேறு என்றுணரத்தகும்.

**ஆதித்தன்**—(1) சூரியன் (2) சேரநாட்டரசருளொருவன். சிதம்பரத்திற் கனகசபையின் முகட்டினைச் செம்பொன்னாற் செய்வித்தவன் இவனே.

**ஆதித்தியன்**—ஆதித்தன்.

**ஆதித்தியஹ்ருதயம்**—சூரியானுக்கிரகத்தை உண்டுசெய்யத்தக்க ஒரு தோத்திர ரூபமானநூல். இஃது அகஸ்தியரால் இராமனுக்குபதேசிக்கப்பட்டதென்ப.

**ஆதிநாதன்**—(1) ஒருஜைனகுரு (2) நவசித்தருளொருவர்.

**ஆதிமந்தியார்**—நல்லிசைப் புலமைமெல்லியலாருளொருவர்.

**ஆதிரை**—சாதுவன் மனைவி, ஒப்புயர்வில்லாக் கற்பினள். தன்கணவனிறந்தானெனக் கேட்டு உயிர்விடற்குத்தீப்பாய்ந்து அது சுடப்படாமையின் வருந்திநின்று "உன்கணவன் விரைவில்வருவான்" என்றெழுந்த அசரீரியைக் கேட்டு அவ்வண்ணமே கணவன் வரப்பெற்று அவனோடு உயிர்வாழ்ந்திருந்தவள். மணிமேகலை யிரந்துவந்த

பொழுது அமுதசுரபியில் முதலிற்பிச்சையிட்டவள். இவள் பத்தினிப்பெண்டிரென்றும் வான்றருகற்பினளென்றுஞ் சொல்லப்படுவள் [மணிமே]

ஆதிவாயிலார்—ஒரு தமிழ்ப்புலவர். இவர் செய்த பரதசேனாபதீயம் அடியார்க்கு நல்லாரால் சிலப்பதிகாரவுரையில் மேற்கோளாக எடுத்தாளப்பட்டுள்ளது.

ஆதூர்த்தராஜன்—கசனுக்கு மூன்றாம்புத்திரனும் தர்மாரணியத்தைபுண்டுசெய்தவனும் இவனே. இவன் மகன்கயனென்பான ராஜருஷியாயினவன்.

ஆத்திரேயம்—வேதாங்கமாகிய கல்பவகைகளுளொன்று. இது அத்திரிமுனிவனாற்செய்யப்பட்டமையின் இப்பெயரேற்றது. வடநூல்.

ஆத்திரேயன்—சந்திரன். அத்திரிமுனி புத்திரனாகலின் தத்திதாந்தநாமம்.

ஆத்திரையன்—தமிழ்ப்புலவன். இவன்மிக்கபழையகவிகளிலொருவன்.

ஆநந்தகிரி—சாலிவாகன ஒன்பதாம் சகாப்தத்தில் விளங்கிய ஒருசமஸ்கிருதகவி. சங்கரவிஜயமென்னுநூலைச்செய்தவன். சங்கராசாரியர் சீடருளொருவனென்றுஞ் சொல்லப்படுவன்.

ஆநந்த தீர்த்தர்—மத்துவா சாரியருளொருவர். வேதாந்த சூத்திரத்திற்கு ஆநந்ததீர்த்தியமெனப்படும் துவிதவைஷ்ணவ பாஷியத்தை எழுதியவர்.

ஆநந்தநாயகி—திருநெல்வாயிலில் உமாதேவி திருநாமம். [ருவர்.

ஆநந்தன்—புத்தசிஷர்பதின்மருளொ

ஆந்திரபிருத்தியர்—மகத தேசத்தரசர். இவர்கள் சூத்திரகன் வமிசத்துதித்தோர்.

ஆந்திரம்-(1)ஒரு தேசம். கோதாவிரி கிருஷ்ணை நதிகட்கிடையே யுள்ளது. இதுவே தெலுங்கதேசம். (2) தெலுங்குப்பாஷைக்கு நாமாந்தரம். இது கண்ணுவமுனிவரால் விருத்திசெய்யப்பட்டதென்கிறார்கள். [சாரார்.

ஆந்திரர்—பஞ்சதிராவிடரு ளொரு

ஆந்தை—ஒல்லையூர்தந்த பூதப்பாண்டியனுடைய நேயன். [ருவன்.

ஆபச்சைவன்—அஷ்டசைவர்களிலொ

ஆபதோத்தாரணமூர்த்தி-அஷ்டாஷ்ட மூர்த்தங்களாகிய சிவலீலைகளுளொன்று. இதுவிரிக்கப்பெருகுமாதலின் "கணங்கள் கலுழிமதக்கடவுள கதிர்வேற் குரிசிலெழுமாதர், நிணங்கொ டிகிரிப் படையேந்தனிவவெண்கோட்டுமலர்ப்புத்தே, ளணங்கு நவக்கோண் முனிவரர்சூழ்ந் தணுக்க ராகப் பொலந்தவிசி,னிணங்குமாவற்ச காயனெனுமிலறமைப் பெருமான் றிருவுருவம்" என்னுங்காஞ்சிப்புராணச் சிவபுண்ணியப்படலச்செய்யுளா னுணர்க. அல்லது அகலம் சிவபராக்கிரமத்திற்கண்டுணர்க.

ஆபத்சகாயர் -(1)திருப்பழனத்திலே சிவபெருமான் திருநாமம்.(2)திருத்தணிகையில் ஸ்தலவிநாயகர்.

ஆபத்சகாயேசுவரர் — குரங்காடு துறையிலே சிவபிரான்திருநாமம்.

ஆபஸ்தம்பன்—யசுர்வேதவிகிதமான கருமங்களைப்பற்றிச் சூத்திரஞ் செய்த மகருஷி. இவரால் செய்யப்பட்டது ஆபஸ்தம்பகிருஹ்யசூத்திரம்.

ஆயன்—வசுக்கள் எண்மரி லொருவன்.

ஆபீரம்—சிந்துநதிக்கு மேற்புறத்துள்ள ஒருதேசம். இது ஆரியாவர்த்தத்தோடு கலந்துள்ளது.

ஆபுத்திரன்—சாலியின் புத்திரன். பிறந்ததுமுதல் ஏழுநாள்வரையில் ஒருபசுவினாற் பாலூட்டப்பட்டு வளர்ந்தமையின் இப்பெயர் பெற்றவன். அன்பும் அருளுமுடையவன். தென்மதுரையிற் கலாநியமத்துள்ள சிந்தாதேவியால் அமுதசுரபியென்னும் பாத்திரம் பெற்றுப் பலஉயிர்கட்கும் உணவளித்து மணிபல்லவத்தி லிறந்து, சாவக நாட்டுள்ள நாகபுரத்தில் பசுவின் வயிற்றிற் பொன்முட்டையிற் றங்கிப் பிறந்துபுண்ணியராசனென்று பெயர் பெற்றவன. [மணிமே]

ஆப்பனூர்க்காரணா—திருஆப்பனூரிலே சிவபெருமான் திருநாமம்.

ஆமூர்—தொண்டை நாட்டிலுள்ளதொருநகரம். இதற்கு மகாபலிபுரமெனவும் நாமாந்தரம்.

ஆம்பிகேயன் — திருதராட்டிரனைக் காண்க. இஃதவன் நாமாந்தரம்.

ஆம்பிரவனேசர்—திருமாந் துறையிலே சிவபெருமானுக்கு வழங்குந் திருநாமம்.

ஆயதி—மேருவின்மகள். தாதாவின் பாரியை. மிருகண்டனை யீன்றவள்.

ஆயாதி—உத்தானபர்கியிற் காண்க. இஃது அவளது நாமாந்தரம்.

ஆயிரவேலி—நெடுஞ்செழியனெனும் பாண்டியன் அதியனெனனுஞ்சிற்றரசனைப் பொருதுவென்றஇடம்.

ஆயு—புரூரவன் புதல்வன். நகுஷன் க்ஷத்திரவிருத்தன் ரஜிரம்பன் அநேகசு எனுமைவர்க்குந்தந்தை.

ஆயுஷ்மந்தன்—தைத்தியன். பிரகலாதனன் புத்திரரிலொருவன்.

ஆயோதனப்பிரவீணன்—தலிஜராஜகுலோத்துங்கனுக்குப்பின் மதுரையில் அரசுபுரிந்தபாண்டியன்.

ஆய்—கடையெழு வள்ளல்களிலொருவன். இவன் அரசரால் வேளென்னும் உரிமை யடைந்த வேளாளன். பொதியமலையை யடுத்த ஆய் நாட்டை யுடையவன். யானைகள் முதலியவற்றைப் பெருங்கொடையாக வழங்கிய ஈகையாளன். இவன் உறையூர் ஏணிச்சேரி முடமோசியார், துறையூர் ஓடைகிழார், குட்டுவன் கீரனார் முதலிய புலவர்களாற் பாடப்பெற்றவன். "இம்மைசெய்தது மறுமைக் காமெனும்-அறவிலை வாணிக னாஅ யல்லன" என்னும் புறநானூற்றினால் இவன் பயன் கருதாது கொடுத்தவனும், தனக்கு நாகத்தாற் கிடைத்த நீலக்கலிங்கத்தை ஆலின் கீழிருந்த அரசனுக்குக் கொடுத்தவனுமாவன்.

ஆரஞ்சோதி—அருந்ததிக்கு நாமாந்தரம்.

ஆரந்தாங்குபாண்டியன் — உக்கிரகுமாரபாண்டியனுக்கு நாமாந்தரம். இந்திரனளித்த பெரிய ஹாரரதனவடத்தைத் தாங்கினமையின் இப்பெயரெய்தினன்.

ஆராத்தியர் — வீரபத்திரோபாசனை செய்து இலிங்கதாரண முடைய ஒருவகையந்தணர். இவர்கள் மதம் வீரசைவம்.

ஆரியசித்தாந்தம்—ஒரு சோதிடநூல்

ஆரியநந்தி—சீவக னாசாரியன்.

ஆரியபட்டன்—மகா ஜோதிஷர்களி லொருவன்.

ஆரியர்—ஆரியாவர்த்தத்திலிருந்து பரவினவர்கள்.

ஆரியாங்கனை—ஓரியக்கப்பெண்.

ஆரியாவர்த்தம்—ஆரியர்தேசம். இது இமாசலத்திற்கும் விந்தகிரிக்கும் இடையிலுள்ளது. பரதகண்டத்து மன்னர்கட்குப் பூர்வகாலத்துவாசஸ்தானமாயிருந்ததொன்று.

ஆரியை—உமாதேவி.

ஆருகதன்—ஞானவர்ணீய முதலிய பதினெண்குணங்களையும் அரசிக முதலிய அறுகுணங்களையும் விலகிப் பண்டைக்கன்மத்தைப் புசித்துத் தொலைந்த விடமே வீட்டின்பமென்பவன்.

ஆலகாலன்—சிவகணவீரரி லொருவன். உதிரபபலியேற்கச் சென்ற வைரவருடன் தொடர்ந்த பரிசனரு ளொருவன்.

ஆலங்குடி—ஒருநகரம். சோழநாட்டிலுள்ளது. இரும்பூளை யென்றும் சொல்லப்படுவது.

ஆலங்குடிவங்கனார்—கடைச் சங்கப் புலவரு ளொருவர். திருவள்ளுவமாலையில் இவர் செய்யுளுமிருக்கின்றது.

ஆலத்தூர்கிழார்—மிக்க நன்றியறிவுடையோர். சோழன் குளமுற்றத்துத் துஞ்சிய கிள்ளிவளவனையும், சோழன் நலங்கிள்ளியையும் பாடியவர். இவர் வேளாளரென்பது கிழாரெனும் பட்டத்தானே விளங்கும். புறநானூறு பாடிய புலவரு ளொருவர்.

ஆலந்தரித்தாசர்—திருப்புள்ள மங்கையில் சிவபிரானுக்கு வழங்குந் திருநாமம்.

ஆலவாய்—மதுரைப்பதிக்கு ஒரு பெயர். [ஆலவாய்=பாம்பு] பாம்பினால் ஒருகாலத்தில் எல்லை வரையறுத்துக் காட்டப்பட்டது.

ஆலாலசுந்தரர்—சிவபெருமான் ஒருகாலத்தில் தமது திருவுருவைக் கண்ணாடியிற்கண்டு சுந்தரமெனக் கருத, அச்சுந்தரமேதிரண்டோருருவாய்த்தோன்றியவர். இவர் ஸ்ரீகைலாயத்தில் புட்பத்தொண்டு செய்துகொண்டுவிபூதிப்பெட்டகந் தாங்கிநிற்பவர். இவரேசுந்தரமூர்த்திசுவாமிகளாக அவதரித்த சைவ சமயாசாரியர். திருப்பாற்கடலிலுதித்த ஆலத்தைச் சிவாக்கினையாற் கையிற்றாங்கி வந்து சிவபிரான் பருகத் தந்தவராகலின் இப்பெயரேற்றனர்.

ஆவர்த்தம்—சப்தமேகங்களு ளொன்று. இது நீர்மாரி பொழிவது.

ஆவுடையநாயகர்—திருமுருகன்பூண்டியிலே சிவபிரானுக்கு வழங்கும் திருநாமம்.

ஆவுடையநாயகி—திருமுருகன் பூண்டியிலே உமாதேவிக்கு வழங்கும் திருநாமம்.

ஆவூர்மூலங்கிழார்—புறநானூறு பாடிய புலவருளொருவர். இவர் வேளாண் குலத்தவரென்பது இவருக்குரிய கிழாரென்னும் பட்டத்தினாலேயே நன்கு விளங்கும். இவராற் பாடப்பட்டோர் சோழன்குளமுற்றத்துத்துஞ்சியகிள்ளிவளவன், சோணாட்டுப் பூஞ்சாற்றூர்ப் பார்ப்பான், கௌணியன் விண்ணந்தாயன், மல்லிகிழான்காரியாதி ஆந்தியும், பாண்டியன் கீரஞ்சாத்தன்,

பாண்டியன். இலவந்திகைப் பள்ளி த்துஞ்சிய நன்மாறன் முதலியோர்.

ஆளவந்தாராண்டான்—வைணவ சிவ காசனுதிபதிகள் எழுபத்துநாலவரு ளொருவர். [மிகள்.

ஆளுடையநம்பி—சுந்தரமூர்த்திசுவா

ஆளுடையநாயகி-திருப்பரங் குன்றத் தில் உமாதேவியாருக்கு வழங்குந் திருநாமம்.

ஆனகதுந்துபி--வசுதேவன் [யதுவமி சத்தவன்.]

ஆனகன—யது வமிசத்து வசுதேவ னுக்கிளவல்.

ஆளுடையபிள்ளை- திருஞானசம்பந்த மூர்த்திசுவாமிகள்.

ஆளுடையவடிகள்—மாணிக்க வாசக சுவாமிகள்.

ஆளுடையவரசு—திருநாவுக்கரசு சு வாமிகள்.

ஆறும்பத்து—எட்டுத்தொகை நூலு ளொன்ருகிய பதிற்றுப்பத்தில் ஆ ருவது பத்து. ஆடு கோட்பாட்டுச் சேரலாதனைக் காக்கைபாடினியார் நச்செள்ளையார் பாடி அவர் அணி கலனுக்கு ஒன்பது துலாப்பொன் னும், பரிசிலாக நூறாயிரம் பொற் காசும்கொடுக்கப் பெற்று, அவன் பக்கத்திலிருத்தலுங் கொண்டது. [செள்ளை - பெண்பாலருக் குரிய பண்டைக்காலவழக்கப்பெயர்.]

ஆனகொத்தி—ஒருநகரம். இது ருஷி யமூக பர்வதத்திலுள்ளது.

ஆனர்த்தம்—ஒருநகரம். யவனசமுத் திரத்தில் துவாரகைக் கருகிலுள் ளது சரியாதி யென்பான் புதல்வ னை ஆனர்த்தனல் நிருமிக்கப்பட்ட டமையின் தத்திதாந்த நாமமாக வழங்கும்.

ஆனர்த்தன்—சரியாதியின் புத்திரன். இவனால் நிர்மிக்கப்பட்ட நகரம் ஆனர்த்தநகரமெனப்படும் இவன் மகன் ரைவதன்.

ஆனுபாயனர்—அறுபான்மும்மை நா யன்மார்களுளொருவர். மழநாட் டிலே மங்கலமென்னு மூரிலே ஆ யர் குலத்திலே யவதரித்தவர். பசு மேய்த்தலாகிய தமது குலத்தொ ழிலையே மேற்கொண்டு அங்ஙனஞ் சீவித்து வேய்ங்குழலிற் சிவநா மத்தைப்பாடி மரம் பக்ஷி முதலி யனவுமுருகும் இசைக்கானத்தால் சிவாநுக்கிரகம் பெற்று முத்தியை யடைந்தவர்.

ஆனீகன—(1) வசுதேவனுக்கிளவல். (2) வசுதேவன் புத்திரரில் இரண் டாவது கோனறியவன [இவர்கள் யதுவமிசத்தவர்]

# இ

இக்ஷுமதி—குசத்துவஜன் இராஜ தானியாகிய சாங்காசியபுரிக்கருகி லுள்ளதொரு நதி. இதன் கரை யிலே கபிலராச்சிரமமிருப்பதாகச் சொல்லப்படுகிறது.

இக்ஷ்வாகு—வைவசுவத மநுவின் புத் திரன். இவன்புத்திரர் விகுக்ஷி நிமி தண்டகன் விசாலன் முதலியோர். இவன் வமிசத்தவரேஇக்ஷ்வாகு வமி சத்தவரெனப்படுவர். இவன் வழி யில் வந்தோர் அஜன் இரகு இரா மன் முதலியோர்கள்.

இசைஞானியார்—சடையனூர் மனை வியார். சுந்தரமூர்த்தி சுவாமிக ளுக்கு மாதா.

இசைநுணுக்கம்—சிகண்டி யென்னு முனிவரன் சாரகுமாரன் பொரு

ட்டு வெண்பாவாலியற்றிய ஒரிசைத்தமிழ் நூல்.

இச்சாசத்தி—ஆதி சத்தியி லாயிரத்தொரு கூறுகொண்டது. சிருட்டிகாரியத்தை நிகழ்த்துவது.

இடங்கழிநாயனார்—அறுபான்மும்மை நாயன்மார்களுளொருவர். கொடும்பாளூரிலே சிற்றரசராக விருந்து அரசு செலுத்தி, சிவனடியார் பால் மிகுதியும் அன்பு செய்து முத்தியடைந்த சிவபக்தர்.

இடபவாகனன் } சிவபெருமான்.
இடபாரூடன் } திரிபுர தகன காலத்தில் திருமால் இடபவாகனமாக வந்து தாங்கப்பெற்றவர். [மால் விடையேயன்றித் தருமவிடை நந்திவிடையென வேறு விடைகளுமுள. அவற்றினை இடபாந்திகம் நந்தி இவற்றிற் காண்க.]

இடபன—(1) சூரபன்மன்மனுடன் போருக்குச்சென்ற பூதகண வீரரிலொருவன். (2) சுக்கிரீவன் சேனைவீரரிலொருவானரன்.

இடபாந்திகம்—சிவமூர்த்தம் அறுபத்து நான்கனுளொன்று. சேயுப்பிரளயமொன்றில் தருமதேவதை இறத்தற்கஞ்சிச் சிவபிரானையடைய, அவர் அசலையநுக்கிரகித்து வாகனமாகக் கொண்டனரென்பது சரிதை. இது கந்தபுராண தக்ஷகாண்டத்திற் செவ்வனே விரிக்கப்பட்டுளது. "பெருகுதேயுப்பிரளயமொன்றனில், தருமம் யாவினுக் குந்தனித்தெய்வதம், வெருவியாமிவன் வீடுத மேவினிப், புரிவ தேதெனப்புந்தியிற்சூழ்ந்ததே. ஆறுவாஞ் சடை யண்ணலைச் சேர்வனேல், ஈறிலாதென்று முய்க்கிடு வேனெனைத்,தேற்றியேறத் தெய்வதஞ்செக்கணும் ஏனறாயொ ரேறுருக்கொண்டதே."

இடும்பன்—(1)முருகக்கடவுளன்பருளொருவர். அகத்தியர் மாணவர். சிவமலை சத்திமலைகளைக் காவடி கட்டிக் கொணர்ந்தவர். இவரைத் துதிப்பது இடும்பன் கவசம். (2) சுக்கிரீவன் சேனைவீரருளொருவனாகிய வானரன். (3) ஓரரக்கன். இடும்பி சகோதரன். வீமனாற் கொல்லப்பட்டவன்.

இடும்பி— அரக்கி. வீமனைக் கூடிக் கடோற்கசனைப் பெற்றவள்.

இடும்பில்—ஓரூர் [சிலப்]

இடைக்காடனார்-இடைக்காடென்னுமூரினராகலின் இப் பெயரேற்றவர். கடைச்சங்கப் புலவருளொருவர். சோழன்குளமுற்றத்துஞ்சிய கிள்ளி வளவனைச் சிறப்பித்துப்பாடியவர். இவரை ஔவையின் சகோதரரென்றுஞ் சொல்லுகின்றனர்.

இடைக்காட்டுச்சித்தர்—ஒரு சித்தர். இவர்ஞான விடயமாக ஒரு நூல் தம பெயராற் செய்தனர்.

இடைக்குன்றூர்க்கிழார்--பாண்டியன் தலையாலங்கானத்துச்செருவென்ற நெடுஞ்செழியன், இருபெருவேந்தரையும் ஐம்பெரு வேளிரையும் வென்ற பொழுது அவனது போர்த்திறம் பாடிய புலவர் [புறநா]

இடைச்சங்கம்—சித்திராங்க பாண்டியனெனுஞ் சிறப்புப் பெயரேற்ற வெண்தேர்ச்செழியன் கபாடபுரத்தில் தாபித்தது. இது முடத்திருமாறன் காலமீறாக நிகழ்ந்தது.

இதனுவரலாறு:—"வடவேறுகாட்

சி நடுவட் சங்கத், தகத்தியர் தொல்
காப் பியத்தமிழ்முனிவர், இருந்தை
யூரிற்கருங்கோழிமோசியார், என்
னாப் புலமை வெள்ளூர்க் காப்பி
யன், இறவாவிசையிற் சிறுபாண் ட
ரங்கன், தேசிக மதுரையாசிரியன்
மாறன், நவரொர்ப்பாயீ துவரைக்
கோமான், தேருங் கவிபுனைகீரங்
கந்தயரிவர், ஒன்பதோடுத்தலைம்
பதின்ம ராகும், நவலருங் கேள்
வித்தன்மைய ருள்ளிட், டவர்மூ
வாயிரத் தெழுநூற்றுவரே,—

"வளையக்கம் பரவச் செய்த செய்
யுளும், இருங்கலி கடிந்த பெருங்
கலித்தொகையொடு, குருகுவெண்
டாளி தெருள் வியாழமாலை, அங்நா
ளிலக்கண மகத்திய மதனொடு,
பின்னுட் செய்த பிறங்குதொல்
காப்பியம், மதிநலங் கனிந்த மாஅ
புராணம், புதநலங் கனிந்த பூத
புராணம், வல்லிதி னுணர்ந்த நல்
லிசை நுணுக்கமும், தாவாக் காலந்
தமிழ்பயின்றதுவும், மூவாயிரத்தோ
டெழுநூற்றியாண்டு,—

"பரீஇயசங்க மிரீஇயபாண் டியர்
கள், வெண்டேர்ச் செழியன் முத
லாவிறல்கெழு, திண்டேர்க் கொற்
றமுடத்திரு மாறன், முரசுடைத்
தானை மூவாவத்த, அரசுநிலையிட்
டோரைம்பத்தொன் பதின்மர்,—

"இவ்வகை யரசரிற் கவியரங்
கேறினோர், ஐவகை யரச ராயிடைச்
சங்கம், விண்ணகம் பரவுமேதகு
கீர்த்திக், கண்ணகன் பரப்பிற்கபா
டபுர மென்ப"— எனவரும் ஆசி
ரியத்தால் விளங்கும்.

இடைச்சுரநாதர்—திரு இடைச்சுரத்
தில் சிவபிரானுக்கு வழங்குந்திரு
நாமம்.

இட்டசித்தி—ஒரு பொய்கை. இது
அழகர் மலையிலுள்ளது. விரும்பி
யன வெல்லாம் பெறச் செய்யவல்
லதாதலின் இப்பெயர் பெற்றதெ
னச் சிலப்பதிகாரங் கூறும்.

இதமவாகன்—அகத்தியர் புத்திரன்.
இவனைப்பற்றிய சரிதையொன்றும்
புலப்படவில்லை. இவன் மகன் இத்
துமவாகன்.

இதிகாசம்—இராமாயணமும்பாரதமு
மென விரண்டு. சிவரகசியமொன்
றுகூட்டி மூன்றென்பதும்வழக்கு.

இத்துமவாகன்—அகஸ்தியர் பௌத்
திரன். இதமவாகன் மகன்

இந்திரகாளியம்—ஓரிசைநூல். இது
யாமளேந்திர ரென்போராற்செய்
யப்பட்டது. சிலப்பதிகாரவுரையில்
மேற்கோள்காட்டப்பட்டுள்ள அள
வேயன்றி நூல்முழுதும் காணப்
பெறாதது.

இந்திரஜித்து—அரக்கன். இராவண
னுக்கு அவன் பட்டமஹிஷியான
மந்தோதரி யிடந் தோன்றியவன்.
இவன் இந்திரனை வென்றுசிறைப்
படுத்தி இலங்கைக்குக் கொணர்
ந்து பிதாவினிடம் விடுத்தவுறுத
லின் இப்பெயரேற்றவன். இவனது
குழந்தைப்பருவத்தே மேகம்போற்
கத்தியழுதது காரணமாகமேகநாத
னெனப் பெயர் பெற்றவன். இல
க்ஷ்மணனாற் சொல்லப்பட்டவன்.

இந்திரசேனன்—(1) சூரியன் மகன்
(2) நளன்மகன் (3 தருமன்சாரதி.

இந்திரசேனை—(1) முத்கலமுனிவன்
மனைவி (2, நளன் மகள் (3) து
ரௌபதி.

இந்திரத்துய்ம்னம்—இந்திரத்துய்ம்ம

னென்னும்மன்னன்வேதியருக்குத் தானங்கொடுத்த பசுக்கள் நின்ற பள்ளமாய தொருவாவி. இவன் நெடுங்காலம் இந்திரசதனத்தில் இருந்தமையின் இவன் கீர்த்திஉலகத்தில் மழுங்கியது. பிறகு அமரர் இவனைப் பூமிமேல் விழும்படி தள்ள, மார்க்கண்டேயனிடஞ்சென்று என்னை யறிவையோவென, மார்க்கண்டேயன் யானறியேன் என்னினும் வயதுமுதிர்ந்த ஹிமசிருங்கிரியில் வசித்திருக்கும் பிராவாரகனெனும் கூகைமாத்திரம் அறியக்கூடுமென, ஆங்குச்சென்று கேட்க அவனும் அறியேனென, அதன் பிரேரணையால் இந்த இந்திரத்துய்மன் சரசிலிருந்த நாளீகஜங்கனெனும் கொக்கினிடஞ்சென்று அதன்மூலமாய் அவ்வாவியிலிருந்த புகந்தரனென்னும் ஆமையை வினவ, அது சிறிதுநேரம் யோசித்து உணர்ந்து அறிவேனென்று பெயர் சொல்லக் கேட்டுக் களித்தவன். இவ்வாவி ஜகநாதத்திலுள்ளது.

இந்திரத்துய்மனன்--இருஷபன்பௌத்திரன். பரதனுக்குச் சுமதியிடம் பிறந்தவன். விஷ்ணுபக்தன். இவன் ஆழ்ந்தயோகத்திருக்கையில் அங்கடைந்த அகத்தியமுனிவரை வந்தனை வழிபாடு செய்யாமையின் யானையாகுக எனச் சபிக்கப்பெற்று யானையாய்த் திரிந்துகொண்டிருந்து நீர் வேட்கையால் ஒரு தடாகத்திலிறங்கி நீர்பருகித் தாமரை முதலிய மலர்களைப்பறித்துப்பலபிடியானைகளுடன் கிரீடித்துக்கொண்டிருக்கையில், [illegible] என்னு ம் கந்தர்வன் நாரதசாபத்தால் அச்சரசில் முதலையாயிருந்து இதன் காலைப்பற்றிக்கொள்ள, இந்திரத்துய்மனயானை எவ்வாற்றானும் தப்பித்துக்கொள்ளக்கூடாது தன்கை மழுக்கப்படி நாராயணனை மூலமேயென்று கூவி, திருமாலினால் முதலையைச் சங்கரித்துக் காக்கப்பெற்றவன். இச்சரித்திரம் கஜேந்திரமோக்ஷமென்று வழங்கும்.

இந்திரப்பிரமிதி—ஒரிருடி. வியாஸசீடனான பயிலகன் சீடன். இவன் ருக்வேதத்தினை நாற் கூறுசெய்தவன். இவன்பால் உபதேசம் பெற்றோர் பாஷ்கலன் போத்தியன் பராசரன் யாஜ்ஞவல்கியன் மாண்டேக்யன் அக்னிமதி யெனப்படுவோர்.

இந்திரப்பிரஸ்தம்-டில்லிக்குச் சமீபத்திலுள்ள ஒருநகரம். பாண்டவர்கட்கிராஜதானி. இதற்குக்காண்டவப்பிரஸ்தமென்றும் நாமாந்தரம்.

இந்திரவதி—கோதாவரியின் உபநதிகளிலொன்று.

இந்திரவாகனன்—ககுஸ்தனெனவும் மறுபெயருடையவன். இக்ஷ்வாகு பௌத்திரனான விகுக்ஷியின் புத்திரன். இவன் திருமால் அருளையால் விருஷபரூபம் வகித்த இந்திரன் [ககுஸ்தம்] முதுகின்மீது ஆரோகணித்துப் போர்புரிந்து அரக்கர்களைக் கொன்றமையின் இவை காரணப்பெயர்கள். இக்ஷ்வாகு மகனெனவும் வால்மீகர் கூறுவர்.

இந்திரவிழா—அகஸ்திய முனிவர்கட்டளைப்படி தூங்கெயிலெறிந்ததொடித்தோட்செம்பியனென்னும் அரசனால் தொடங்கப்பட்டு வருடந்

தோறும் காவிரிப்பூம் பட்டினத்திற் சோழபரம்பரையாரால் இந்திரனுக்கு நடத்தப்பட்டு வந்த தோருற்சவம். இதனை நெடுமுடிக்கிள்ளியெனு மரசன் செய்யா தொழிந்தமையின் காவிரிப்பூம்பட்டினங் கடலாற்கொள்ளப்பட்டது. [மணிமே]

இந்திரன்—(1) தேவர்க்கரசன் கிழக்குத்திசைப்பாலகன். கசியபருக்கு அதிதியினிடம் தோன்றியவன். இவன் நகரம் அமராவதி. மனைவி இந்திராணி. ஆயுதம் வச்சிரம். யானை ஐராவதமென்னும் நாற்கோட்டு வெள்ளையானை. குதிரை உச்சைச்சிரவம். சாரதி மாதலி. மகன் ஜயந்தன். வாகனம் மேகங்கள் புஷ்பகம் ஐராவதம் உச்சைச்சிரவ முதலியன.

இவன் ஒருகாலத்தில், தன்சபைக்குற்ற பிரகற்பதி முனிவரைத் தக்கபடி நமஸ்கரியாது ஆடல்பாடல்களில் மனஞ்செலுத்தியிருப்ப, அம்முனிவர் தம்மை யிகழ்ந்தது கருதி மறைந்துவிட, இவன் செல்வம் நாளடைவிற் குறைய, ஆசிரியனை யாண்டுத் தேடியுங் காணப்பெறாது பிரமன்பால் விண்ணப்பிக்க, பிரமன் நின் ஆசிரியன் காணப்படுமெல்லையும் துவஷ்டாவின் மகனை முச்சிரமுற்ற விச்சிரவசுவை அசுரனெனக்கருதாது குருவாகக்கொடுவென, அக்கட்டளைக்கிணங்கி அங்ஙனமே கொண்டு அமரர்செல்வமிகத்தக்க தொருயாகம் ஆற்றுகவென, அவன் அங்ஙனமே யாகுகவென்று, அமரர் செல்வங்குன்றவும் அசுரர் செல்வமதிகரிக்கவுங் கபடமாகச்செய்தலை அவனது மந்திர முதலியவற்றாலுணர்ந்து, காக்கும் மனமும் வேறுபட்ட வஞ்சகனைத் தன் கைவச்சிரத்தாற் குறைத்து அதனால் நேர்ந்த பிரமஹத்தியை மரம் நிலம் நீர் மாதருக்குப் பகிர்ந்தளித்து, அஃதெங்ஙனமெங்கட்கொழிவதென அவர் கேட்ப, மரத்திற் பயினாகவும், நிலத்தில் உவராகவும், மாதர்க்குப் பூப்பாகவும், நீரில் நுரையாகவும் கழிகவென, இப்பழியேற்ற எங்கட்கியாது நலமுண்டாமென, மரங்கள் வெட்டுந்தோறுந் தளிர்க்கவும், நிலம் பள்ளமாயின் தானே நிரம்பவும், கருவடைந்த மாதர் கருவுயிர்க்கு மெல்லையுங் கணவரைக்கூடவும், நீரிறைக்குந்தோறும் ஊற்றெடுக்கவும் வரமளித்துப் புனிதமானவன்.

துவஷ்டா தன்மகனை இந்திரன் கொன்றதனாற் சினந்து, விருத்திரனென்னுமோ ரசுரனை யுண்டுசெய்து இந்திரனைக்கொன்று வருகவென்விடுப்ப, அவன் போருக்கு வந்தகாலத்தில், தன்கைவச்சிரம் மிகப்பழைமையாய்த் திடனற்றதாயிருந்தமையின், தேவர் சூழ்ச்சியால் ததீசிமுனிவரை யடைந்து, [ததீசியிற்காண்க] அவர்முதுகென்பைக் கொடுக்கப்பெற்று விச்சுவகன்மனால் புதியதோர் வச்சிரஞ்செய்துகொண்டு விருத்திரனை யெதிர்ப்ப, அவன் போர்புரிய வலாது கடலிலொளிப்ப, அகத்தியமுனிவரால் கடலைவற்றச்செய்து அவனைத் தவஞ்செய்து கொண்டிருக்கையிற் கொன்று, பிரமஹத்தியால் வருந்திப் பிரகஸ்பதிமுனிவ

ரநுஜைஞ்யாற் சிவார்ச்சனை செய்து பிரமஹத்தியினின்று நீங்கியவன்.

இவன் பிரமஹத்தியாற் பீடிக்கப்பட்டுத் துன்புற்றிருக்கையில் இந்திரபட்டத்தொருவரு மின்மையால் நகுஷனென்பவனை இந்திரபட்டத்திற்கேற்றவனெனக்கொண்டுபோக அவன் அகத்தியர் சாபத்தால் சர்ப்பமாயினன் [அகத்தியரில் அல்லது நகுஷனிற் காண்க.]

முற்காலத்தில் மலைகள் சிறகுகளுடையனவாயிருந்து ஓரிடத்தினின்று மற்றோரிடத்திற்குக் காலாகாலத்திற் பறந்து செல்வனவாய் உலகினர்க்குத் துன்புசெய்து வந்தமையின், தேவர் மாநுடர்வேண்டுகோளுக்கிணங்கி அவற்றின் சிறகையரிந்து கோத்திரபித்தெனுங் காரணப் பெயர்பெற்றவன். [அங்ஙனமரிந்து வருகையில் இமயமலையின்மகனான மைநாகம் தென்கடலிலொளித்துக்கொண்டதென்று நூல்கள் கூறும்] ஒவ்வொருமலையிலும் அதன் அதிதெய்வமாயிருக்குங்கந்தர்வாதியரை மலையெனஉபசரித்துக் கூறுவது வழக்கு.

இவன் கௌதமமுனிவர் பத்தினியாகிய அகலிகையை யிச்சித்து அவளைக்கரவிற்புணர்ந்து, அம்முனிவர் சாபத்தால்உடல்முழுதும் பெண்குறியடையப்பெற்று, தேவர்கள் அம்முனிவரை வேண்டிக்கொண்டமையின் தன்கண்கட்குப் பெண்குறிகளாகவும் பிறர்கண்கட்குக் கண்களாகவும் விளங்கச் சாபாநுக்கிரகம் பெற்று ஆயிரங்கண்ணனெனும்பெயர்பெற்றவன். இச்சமயத்தில் இந்திரனுக்கு விருஷணங்களறச்சாபமந்து பேஷாண்டஞ் சேர்க்கப்பட்டதென்றும் நூல்கள் மாறுபடக் கூறுதலுமுண்டு.

இந்திரன் மேகவாகனனும் மேகராஜனுமாகலின் இவனை மகிழ்விக்க ஆரியர் ஆண்டுதோறும் சங்கராந்திக்கு முன்னாளில் போகிப்பொங்கலிட்டு விழாவெடுத்து வருவது வழக்கு. [போகி = இந்திரன்.] கிருஷ்ணன் யாதவர்களிடமிருக்கையில் அவர்கள் செய்தபொங்கலை இவன் கொள்ளாதகையாகத் தடுத்துத் தான்கொண்டமையின் அதுசகியாது மேகங்களையேவி மழைபொழிவிக்க, கிருஷ்ணன் கோவர்த்தனகிரியைக் குடையாகப் பிடித்துப் பசுநிரையையும் யாதவர்களையுங் காத்தனன்.

சியவனமுனி யாகத்தில் அச்சுவினி தேவர்க்கவியூட்ட அவனைக் கொல்லக்கருதி வச்சிரமெடுத்து, தேவமருத்துவரான அச்சுவினி தேவரால் கைகள் ஸ்தம்பிக்கப்பட்டு அவர்கட்கு யாகத்தில் அவி கொடுப்பதாக இணங்கியவன்.

ஒருவராலும் அசைக்கப்படாமையால், துச்யவனனெனப்படுவன்.

காசிபருக்கு மாயையிடந்தோன்றிய சூரபன்மன் ஆயிரத்தெட்டண்டங்களையும் நூற்றெட்டுகம் அரசுசெய்து பலரையுந்துன்புறுத்தி, தேவர்களை மீன்கொண்டு வந்து கொடுக்குந் தொழிலிலமைத்தபொழுது பயந்து சீகாழியில் நந்தவனம் வைத்து மறைந்து சிவபூஜை செய்து பின்னர் கைலாயத்திலிருந்து அவன் கொல்லப்பட்ட பிறகு அமராவதியையடைந்தவன்.

பாரிசாதனெனும் அரசன் பாரிவபுஷ்டடையின் அழகில் இச்சைகொண்டு அவளைக் கூடுதற்குப் பலவகை யுபாயங்கள் செய்தும் அமைதலாது அவ்வரசன் செய்த அசுவமேதத்தில் யாகப்பசு உயிர் நீங்கியவுடன் அவ்வுடலிற் பிரவேசித்து அவளைக் கூடித் திருப்தி யடைந்து அவ்யாகத்தைப்பயனிலதாகச் செய்தவன் [சைவ புராணம்.]

இவனை மகனாகத் தெய்வயானை யவதரித்தபொழுது குமாரக்கடவுளுக்குத் திருப்பரங் குன்றத்தில் திருமணஞ்செய்து கொடுத்தவன்.

தக்ஷயாகத்தில் குயில் வடிவேற்று ஓடிப்போனவன். இவனால் செய்யப்பட்ட வடமொழி யிலக்கணம் ஐந்திரமென்றும், அதனைத் தொல்காப்பியனார் இவனிடம் பயின்றாரென்றும் சொல்லுவர். இவனால் செய்யப்பட்ட சிற்பநூல் இந்திரமென்ப. இது சிற்பம், முப்பத்திரண்டனு ளொன்று.

(2) தூங்கெயிலெறிந்த தொடித்தோட்செம்பியனால் விழாக்கொள்ளும்படி வேண்டப் பட்டவன். மணிபல்லவத்திற் புத்த பீடிகையை நிர்மித்துத் தரிசித்தோரது பழம்பிறப்பினைப்புலப்படுத்துமபெருமையை அதற்குண்டாக்கி, அதனைப் பாதுகாக்க, தீவதிலகை யென்னுந் தெய்வப்பெண்ணை நியமித்தவன். உயிர்களைப் பாதுகாக்கும் ஆபுத்திரனை வரமளிக்கவந்த தன் வார்த்தையை அவன் மதியாமையால் இரப்போரின்றி அவன் வருந்த எவ்விடத்தும் மழை பெய்வித்து வளமுண்டாகச்செய்தவன். தனது ஆசனமாகிய பாண்டுகம்பளத்தின் நடுக்கத்தால் உலகினுள்ள அறவியல்புடையார்க்குச் செய்ய வேண்டியவற்றை யறிந்து விரைந்து செய்தவன். இவன் பரம்பரையோர் சாவகநாட்டுள்ள நாகபுரத்தரசர். [மணிமேகலை.]

இந்திராணி-இந்திரன் மனைவி. புலோமசை. சத்தமாதருளொருத்தி. மகன் சயந்தன். வாகனம் யானை. ஆயுதம் வச்சிரம்.

இந்திராவரஜன்—உபேந்திரன். இந்திர+அவரஜன். அவரஜன்=இளையன் [இந்திரற் கிளவலென்பது பொருள்.]

இந்தீவராக்ஷன்—கந்தர்வரி லொருவன். நளநாபன்மகன். வருதினிக் கிளவல். ஓரிருடியை யடைந்து ஆயுள்வேதத்தை நன்குணர்ந்து அதன் பின்னர் அம்முனிவனை யிகழ்ந்தமையின் அவன் சாபத்தால் ராக்ஷஸனாகிச் சுவாரோசியினால் அச்சாப நீங்கியவன்.

இந்து—(1) சந்திரன் (2) அதிசாந்திரதன் (3) சாசுவதன் புதல்வன். (4) ஏசியபகோத்திரத்தானாய ஓரந்தணன். இவன் கலையுணர் புலவர்கள் பதின்மரைப் புத்திரராகத் தருகவெனச் சிவன்பால் வரங்கிடந்து ஐந்தவரெனும் பதின்மரைப் புதல்வராகப் பெற்றவன்.

இந்துமதி — விதர்ப்ப ராஜகுமாரி. அஜன் மனைவி. தசரதன் தாய்.

இமயமடக்கொடியம்மை — திரு இடைச்சுரத்திலே உமாதேவிபெயர்

இமயவரம்பன் நெடுஞ்சேரலாதன்— ஒருசேரன். வடநாட்டரசர்களை

வென்று சென்று இமயமலையின் மேல் தனது குலவிலச்சினையாகிய விற்கொடியைப் பொறித்தமையா ல் இப்பெயரேற்றவன். விடாச்சி லை பொறித்த வேந்தன் என்றுங் கூறப்படுவன். இவ்வரசனுக்கும் கோவலனுடைய ஒன்பதாந்தலை முறையான கோவலனுக்கும் நட்பு ண்டு இவனைக் குமட்டூர்க்கண்ண னார்பதிற்றுப்பத்தில் இரண்டாம்ப த்தினைப் பாடியதற்காக உம்பற்கா ட்டு ஐந்நூறூர் பிரமதாயமும்,இரு பத்தெட்டாண்டு தென்னாட்டில் வருவதிற் பாதியும்பரிசிலாகத்தந்த வன். இவன் ஐம்பத்தெட்டியா ண்டு வீற்றிருந்தான்.

இமயவரம்பன்றம்பி பல்யானைச்செல் புகழ்க்குட்டுவன்—எட்டுத் தொ கையு ளொன்றான பதிற்றுப்பத் தில் மூன்றாம்பத்தை யிவன் மீது பாலைக் கௌதமனார் பாடியதற்குச் சுவர்க்கம்பெற்றனர். இவன் இரு பத்தைந்தியாண்டு அரசிருந்தனன.

இமயம்—பூலோகத்திலுள்ள மலைக ளிலெல்லாம் ஒரு பெரியபாவதம். பாரத வருஷத்தின் வடக்கெல்லை யாயுள்ளது. இம்மலையே பர்வத ராஜனென்ற பெயரால்விளங்கும இது ருஷிகள் சித்தர்யோகிகளது வாசஸ்தனமாம். இம்மலையிலேயும் ஒரு கைலாயமுண்டு. செங்குட்டு வனுகிய சேரன் பத்தினிக் கடவு ளாகிய கண்ணகியின் திருவுருவஞ் சமைப்பித்தற்கு இம்மலையினின்று கல் வருவித்தனன்.

இம்சை - கிருதி புத்திரி. வருணன் ஜேஷ்டாதேவியிடம்பெற்ற ஆதர் மன் மனைவி.

இயக்கர்—பதினெட்டுத் தேவஜாதி யரு ளொரு சாரார்.

இயக்கன்—பூதப்பாண்டியன் சோழ ருளொருவன்.

இயக்கி—ஆரியாங்கனையெனும் ஒரு பெண்டெய்வம். பாண்டிநாட்டார் இசக்கி யென்றுஞ் சொல்லுவர்.

இரகசியகாளிபீடம் — அறுபத்து நான்கு சத்திபீடங்களுளொன்று. இது நேபாளத்திலுள்ளது.

இரகுநாதகோவை—குருகூர் இரா மாநுஜ கவிராயராலியற்றப்பட்ட தொரு நூல்.

இரகுநாத சேதுபதி—இராமநாத பு ரத்தில் அரசராக இருநூறு வரு டங்கட்கு முன்னிருந்தவர். கல்வி யபிமானமும் வித்வசன்மானமுமு ளளவர் இவர்மீது ஒருதுறைக்கோ வை [நாணிக்கண் புதைத்தல் துறை] ஒன்று அமுத கவிராய ரால் அதியற்புதமாகச செய்யப் பட்டுளது. இப்பரம்பரையே கல் வியை வளர்த்து "மருவு முத்த மிழை முன்னாள் வளர்த்த பாண்டி யன்" என்பதற்கோர் இலக்கிய மாயுள்ளது.

இரகுவமிசம்— காளிதாச கவியியற் றிய ஒரு நாடகம். அரசகேசரியால் தமிழ்ப் படுத்தப்பட்டது.

இரசநிரூபணம—சிருங்காரரசம் அஷ் டரசம் பாவம் இவற்றை நிரூபண ஞ் செய்துள்ளதோ ரலங்காரநூல்.

இரசரசத்நிாகரம் — நவரத்தினங் கள் பொன் வெள்ளி முதலியலோ கங்கள் கந்தாதிகள் இவற்றைப் பஸ்மிஞ்செய்தல் உருக்கல் முத லிய முறைகளை யுணர்த்தும் ஒரு இரசவாதநூல். இதனை யியற்றி

னூர்த்திய நாதசித்தர்.

இரசனை—திரிபுத்திரி - 'துவஷ்டா பாரி. சஞ்ஞிகையின்தாய்

இரசாதலம்— கீழேழுலகத்தொன்று இதன் முக்கிய நகரம் போகவதி. இதற்கரசன் வாசுகி. வாமனன் மிதித்தழுத்திய பலி இதிலேயே வசித்திருப்பன். அதனால் இது பலிசத்மமெனப்படும்.

இரட்டைப்புலவர்—அந்தகனும்முடவனுமாகப் பிறந்த இருசகோதரர்களான வேளாண்புலவர். முடவன் அந்தகன்மீதேறி வழிகாட்டிச் செலுத்த நாடெங்குந் திரிந்து பற்பல அற்புதக்கவிபாடியவர்கள். முடவன் இரண்டடிசொல்ல அந்தகன் அதைப்பூர்த்தி செய்வது வழக்கம். திருஷ்டாந்தம்- "தேங்குபுக ழாங்கூர்ச் சிவனேவல் லாளியப்பா, நாங்கள் பசித்திருக்க ஞாயமோ" என ஒருவரும் "—போங்காணுங், கூறுசங்கு தோல்முரசு கொட்டோசை யல்லாமற், சோறுகண்ட மூளிகளார் சொல்" எனஒருவருங் கூறினர். அன்றியும் மற்றொருசமயம் "மாங்காட்டு வேளான் மகளை மருமகன்பாற், போங்காட்டி லின்பம புணர்த்தனே" என ஒருவரும், "—ஆங்காணும், மக்கண் மெய் தீண்ட லுடற்கின்ப மற்றவர்தஞ், சொற்கேட்ட லின்பஞ் செவிக்கு" என ஒருவருமாகக் கூறியதுங்காண்க.

இவர்கள் கலம்பகம் பாடுதலில் வல்லவர்களென ஒளவையாரால் "கண்பாயகலம்பகத்திற்கிரட்டையர்கள்*** அலாதொருவர் பகரொணாதே" என வியந்து பாடப்பெற்றவர். இவர்கள் பாடியநூல்கள் தெய்வீகவுலா திரு ஆமாத்தூர்க் கலம்பகம் தில்லைக்கலம்பம் திருவொற்றியூர் மாணிக்கத்தியாகர் வடிவுடையம்மை பஞ்சரத்தினங்கள் முதலியன. "ஆசுகவியாலகில வுலகமெங்கும்,வீசுபுகழ்க்காளமேகமே-பூசுரா, விண்கொண்ட செந்தழலாய் வேகின்ற தையையோ, மண்டின்ற பாணமென்ற வாய்" எனப்பாடிக் காளமேகப் புலவரிறந்தபின் வருந்தியவர்கள்.

இரணியகசியன்—தைத்தியன். கசியபனுக்குத்திதியிடத்தோன்றியவன் இவன்சகோதரன்இரணியாக்ஷன். இவன் பிரமனை நோக்கிக் கடுந்தவம் புரிந்து தேவாசுரமாதுடராலும் எவ்வகையாயுதத்தாலும் இறவாவர மேற்று இறுமாந்து பலரையுந் துன்புறுத்திக் கடவுளைப் பணியாது தானே தலைவனெனத்தருக்குற்றிருப்ப, நாரணன் தன் கூருக அவனுக்குப் பிரஹலாதனெனும் மகனையுண்டு செய்ய, அச்சிறுவனுக்கு வித்தியாப்பியாசஞ் செய்விக்கத் தொடங்குகையில்,இரணியகசியன் கட்டளைப்படிஅப்போதகாசிரியன் இரணியாயநமஃ எனக் கற்பிக்க,சிறுவன் நாராயணாயநமஃ என, அவனைப் பலவாறு துன்புறுத்தியு மிணங்காது, உன்னைத்தியேன் நீ யோரரக்கன்எனக்கூற, இரணியகசிபன் சினந்து நீகூறும் நாராயணன் யாண்டுளன் என வினவ,பிரகலாதன் "சாணிலுமுளனோர் பெற்றி யணுவினைச் சதகூறிட்ட, கோணினு முளன் மாமேருக் குன்றினு முளனிந் நின்ற,

தூணிலு முளனென்று சொன்ன சொல்லினு முளனிச் செய்தி, காணுதி விரைவி னென்றானென்றனக்கன கன் சொன்னான்.'' உடனேஇவன் சினந்து அத்தூணையுதைப்ப, அத்தூணத்தினின்றும் திருமால் நரவடிவுஞ் சிங்கவடிவுங்கலந்த நரசிங்கமாய்த் தோன்றித் தமதுகை யுகிர்களால் அவனைப்பிளந்து வீழ்த்த இறந்தவன். இவன் இரணிய னென்றும் நாமாந்தரமுடையான். இவன் ஜயவிஜயர்களிலொருவன் [ஜய விஜயரிற் காண்க.]

இரணியநாபன்-யாஜ்ஞவல்கியமுனிவர்பால் யோகாப்பியாசம் பயின்ற ஓரந்தணன்.

இரணியவர்மன்—கௌடதேசத்தரசருளொருவன். இவன் பூர்வபாவத்தால் வெண்குஷ்டமடைந்து சிங்கவன்மனென்னுங் காரணப் பெயரேற்று, எவ்வாற்றானும் அந்நோய் தீரப்பெறாது, உலக வின்பத்தில் மனம் வெறுத்து யாத்திரை செய்யக் கருதித் தன் பரிவாரங்களிற் சிலவற்றை யுடன் கொண்டு பற்பல நதிகளிலும் பொய்கைகளிலும் ஸ்நானஞ்செய்து கொண்டு சிவாலயங்களை நமஸ்கரித்து யாத்திரை செய்து வருகையில், சிதம்பர க்ஷேத்திரத்தை யடைந்து ஆங்குள்ள சிவகங்கையில் மூழ்கியவுடன், தன்னுடலின் வெண்ணிறம் நீங்கிப் பொன்னிறம் பெற்றமையின் இரணிய வன்மன் [இரணியம்=பொன். வன்மன்=க்ஷத்திரியன்.] எனப்பெயர் பெற்றவன். அங்கேயே தங்கியிருந்து திருப்பணி முதலியவற்றைச் செய்து தன் திரவியமுற்றும் அஸ்திபாரத்திற்கே போதாமையின் கடவுளைப் பிரார்த்திக்க, திருவருளால் பொன் மாரி பெய்யப்பெற்று அதனால் திருப்பணியை முற்றுவித்து முத்தியடைந்தவன்.

இரணியன்—(1) இரணிய கசிபனுக்கு மறுபெயர் (2) சூரபன்மன் புத்திரருளொருவன். வீரவாகு தேவரால் கொல்லப்பட்டவன்.

இரணியாக்ஷன்—தைத்தியன். காசியபனுக்கு மகனாகத் தோன்றியவன். இரணியகசிபனுக்குச் சகோதரன். பூமியைப்பாயாகச் சுருட்டிக் கடலிலொளித்துக்கொண்டபொழுது திருமால் வராகவடிவேற்றுச் சங்கரிக்க இறந்தவன். இவன் ஜயவிஜயர்களிலொருவன். [ஜயவிஜயரிற் காண்க.]

இரண்டாம்பத்து—எட்டுத் தொகை நாலுளொன்றாகிய பதிற்றுப் பத்தில் இரண்டாவது. இமயவரம்பன் நெடுஞ் சேரலாதனைக் குமட்டூர்க் கண்ணனார் பாடியது. இதற்காக உம்பற்காட்டு ஐஞ்ஞூறூர் பிரமதாயம் பெற்று முப்பத்தெட்டு வருடந் தென்னாட்டு வரவிற் பாகமுங்கொடுக்கப்பெற்றனர்

இரதிகன்—ஜயசேனன் புத்திரன்.

இரதிதேவி—மன்மதன் மனைவி. இவளே மயன் புத்திரியாக மாயாதேவியாகவும், பிரத்யும்னன் பாரியாகவுந் தோன்றினளென்பர்.

இரத்தினகண்டன்—அச்சலகண்டன் மக்கள் நூற்றுவரில் மூத்தவன் [ரு]

இரத்தினகிரிநாதர்—திருநாட்டியத்தான் குடியில் சிவபிரானுக்கு வழங்குந் திருநாமம்.

இரத்தினதீவம்—மணி பல்லவத்திற் கயலிலுள்ள ஒரு சிறு தீவு. இது இலங்காதீவமென்றுங்கூறப்படும். இதில் புத்தருடைய பாதப்படிமை யமைக்கப்பெற்ற உச்சியை யுடைய மலை யொன்றுண்டு. [மணிமே.]

இரத்தினநாயகர்—திருவாடானையில் சிவபிரானுக்கு வழங்குந்திருநாமம்

இரமியதரன் — தேவரவணத்தரசன் [சூளாமணி ]

இரவிபுரம்—மலைநாட்டிலுள்ள ஓதாரூர்.

இரவிவன்மன்—(1) அசோதர நகரத்தரசன. அமுதபதியின கணவன். இலக்குமியின தந்தை. (2) புத்தன்மகன். [மணி ]

இராகவன்—இரகுமரபினன்இராமன்

இராகு—விப்பிரசித்தென்னுஞ் சானவன்மகன். இவன் சிங்கிகையென்பாளிடம்பிறந்தவன. இவனுக்கிளவல் கேது. திருமால் மோகினி வடிவேற்று க்ஷீராப்தியில் அமுதம் பகிர்கையில் இவ்விருவரும் தேவவுருவெடுத்துத் தேவரோடு கலந்திருந்து அமுதுண்டு விட்டதைச் சூரிய சந்திரர் திருமாலுக்குக் குறிப்பா லுணாத்தினமையின, இருவரும் சூரியசந்திரரை வெகுண்டு போர்புரியத்தொடங்குகையில், திருமால் தமது கையிலிருந்த சட்டுவத்தால் வெட்டப்பெற்றனர். ஆயினும் அமுதுண்ட பலத்தால் இறவாது தவஞ்செய்து கிரகங்களாயினர். இராகு கரும்பாம்பும் கேது செம்பாம்பு மென்ப. இவருள் ஒருவன் பாப்புத்தலையும். தேவவுடலும், மற்றையோன் பாப்புடலும், தேவசிரமுமாகவிருப்பர். நவக்கிரகங்களிற் சேர்க்கப்படினும் இவ்விருவரும் இடப்புறமாக ராசிகளிற் சுற்றி வருவர். இவர்கள் எக்காலமும் ஒருவருக்கொருவர் ஏழாமிடத்திலேயே நிற்பர்.

இராகுலன்—(1) புத்தசேஷர் பதின் மருளொருவன். புத்தன் மகன். (2) அத்திபதியென்னு மரசனுக்கு நீலபதியிடம் பிறந்தவன். இலக்குமியென்பாள் கணவன். திட்டிவிடமெனும் பாம்பாலிறந்து உதயகுமரனாகப் பிறந்தவன். [மணிமே.]

இராக்கதர் } இராக்ஷஸர் } கசியபனுக்குச் சுரசையிடந் தோன்றிய வர்கள். இவர்கள் பிறந்தவுடனே பசிதாக முற்ற சிலர் யக்ஷாம [யாமுண்ணுக ] என்றும, அவையுறாத சிலர் ரக்ஷாம [யாங்காக்க] எனறும் இரைநதது பற்றி இராக்ஷஸரென்றும் யக்ஷரென்றும இருபிரிவாயினர். இராக்கதர்கள் புலத்தியா மரபென்றுஞ் சொல்லப்படுவர். பிராமணும்சமாகத் தோன்றியும் நரமாமிச பக்ஷணமும் மாயையு முடையராய்த் தேவர்க்குச் சத்துருக்களாயினர்.

இராசமன்னார்கோயில் — காவிரியின் தெறகிலுள்ள ஒருவிஷ்ணுஸ்தலம் இங்கே இராசகோபாலப் பெருமாள் செங்கமல வல்லி நாச்சியாரெனுந் தேவியோடெழுந்தருளியிருப்பர். சுயம்புவிமானம. அரித்திராநதியும்,சங்கு சக்கர கிருஷ்ண ருக்மணி கஜேந்திர கோபிரளய கோபி நாத க்ஷீரசாகரமெனப் படும் நவபுஷ்கரணியும் சண்பகாரணியமும் உண்டு. பெருமாளுக்குச் செண்டலங்கார ரென்றுந் திருநாமம்.

இராசமாதேவி—மாவலி பரம்பரையிற் பிறந்தவள். நெடுமுடிக்கிள்ளியின் மனைவி. உதய குமாரன் தாய். மணிமேகலை கூறிய அறநெறி கேட்டுப் புத்திர சோக நீங்கியவள். இவளதியற்பெயர் சீர்த்தி.

இராசமாபுரம் — ஏமாங்க தேசத்திலுள்ள ஒரு நகரம். சீவகன் இராசதானி.

இராசிகள்—மேஷமுதல் மீனமீறாகவுள்ள பன்னிரண்டுமாம். சூரியன் ஒவ்வொரு மாதமாக ஒவ்வோரிராசியிற் சஞ்சரிப்பான்.

இராஜகுஞ்சரன்—பரராஜ குஞ்சரனென்றும் பெயர் பெற்றவன். மதுரையை யாண்ட முப்பத்தைந்தாம் பாண்டியன்.

இராஜகுலோத்துங்கபாண்டியன்—மதுரையை யாண்ட முப்பத்துமூன்றாம் பாண்டியன்.

இராஜகெம்பீரபாண்டியன்- மதுரையையாண்ட பதினைந்காம் பாண்டியன்.

இராஜகேசபாண்டியன்— மதுரையாண்ட பதின்மூன்றாம் பாண்டியன்.

இராஜகேசரி— (1) சோழரிலொருவன். (2) ஈழநாட்டரசரி லொருவன். அரசகேசரியென்று நாமாந்தரமுடையவன். காளிதாசகவியாற் செய்த இரகுவமிசத்தைத் தமிழ்க் காவியமாகச் செய்தவன்.

இராஜசார்த்தூலபாண்டியன் — மதுரையை யரசாண்ட முப்பத்திரண்டாம் பாண்டியன். இராஜ சூடாமணி பாண்டியனுக்குப் பின்வந்தவன்.

இராஜசூடாமணிபாண்டியன் — (1) மதுரையை யாண்ட முப்பத்தோராம் பாண்டியன். (2) அறுபதாம் பாண்டியன்.

இராஜசூயம் வேட்டபெருநற்கிள்ளி- ஒரு சோழன். உலோச்சனாரெனும் புலவராற்பாடப்பட்டவன்.

இராஜசேகரபாண்டியன்— மதுரையையரசுபுரிந்த எட்டாவது பாண்டியன். மாறியாடிய திருவிளையாடல் இவன் வேண்டுகோளால் நிகழ்ந்தது. இவன் கரிகாற்சோழனுடைய காலத்திலிருந்தவன்.

இராஜதர்மன்—காரீஜங்களுக்கு நாமாந்தரம்.

இராஜபயங்கரபாண்டியன்—பரராஜ குஞ்சரனுக்குப்பின் வந்தவன். மதுரையில் அரசு செய்த முப்பத்தாறாம்பாண்டியன்.

இராஜபுரந்தரபாண்டியன்—மதுரையையாண்ட பன்னிரண்டாம்பாண்டியன். தண்ணீர்ப் பந்தர் வைத்த திருவிளையாடலும் இரசவாசஞ் செய்த திருவிளையாடலும் இவன் காலத்திலே நிகழ்ந்தன.

இராஜமார்த்தாண்ட பாண்டியன்—மதுரையாண்ட முப்பதாம் பாண்டியன். சித்திர விக்கிரமனுக்குப்பின் வந்தவன்.

இராஜராஜநரேந்திரன் — வேங்கிதேசத்தரசன். இவன் சமஸ்தான வித்துவான் நன்னயபட்டர்.

இராஜராஜபாண்டியன்—பன்றிக்குட்டிகளை மந்திரிகளாக்கிய திருவிளையாடல் தன்காலத்தில் நிகழப் பெற்றவன்.

இராஜன்—(1) இந்திரன் (2) சந்திரன் (3) ஓரியக்கன்.

இராஜாதிதேவி—வசுதேவன் தங்கை ஜயசேனன்பாரி. விந்தன் அநுவிந்

தன் என்னுமிருவரைப்பெற்றவள்

இராஜாதிராஜபாண்டியன்—மதுரையையாண்ட இருபதாம் பாண்டியன். இசைவாது வென்ற திருவிளையாடல் கண்டவன்.

இராதேயன்—கர்ணன். இராதையால் வளர்க்கப் பெற்றவன்

இராதை—(1) கிருஷ்ணன் மனைவியரில்அதிப்பிரியை. நந்தன் சகோதரி. (2) கர்ணனை வளர்த்தவள். இவளால் வளர்க்கப் பட்டமையின் இராதேய னென்று கர்ணனைக் கூறுவர்.

இராமகிரி — நாகபுரத் தருகிலுள்ள தொருமலை. [மேகதூதம்]

இராமநாதர் — இராமனாற் பூசிக்கப்பட்ட திருஇராமேச்சுரத்தில சிவபிரானுக்கு வழங்குந்திருநாமம்.

இராமர் — தசரதகுமாரர். திருமாலின் தசாவதாரங்களில் ஏழாவதாகத் தோன்றியவர். இக்ஷ்வாகு வமிசத்தவர். இவர்தாய் கௌசல்யாதேவி இவர் சகோதரர் பரதன் இலக்குமணன் சத்துருக்கனனெனப்படுவோர். மனைவி சீதை. புத்திரர் குச லவர்.

பிதுர்வாக்கிய பரிபாலனஞ் செய்ய மனைவியோடும் தம்பி இலக்குமணரோடும் தண்டகாரணியஞ்சென்று வசித்திருந்து அங்குள்ள முனிவர் வேண்டுகோளால் இராக்கதரைத்துவம்சஞ்செய்து அவர்கள் யாகாதிகளைக் காத்து, சூர்ப்பணகையின்சூழ்ச்சியால் இராவணன்சீதையைக்கொண்டுபோக,சுக்கிரீவனென்னும்வானர வீரனட்பை, அனுமானு லடைந்து வாலியைக் கொன்று அவன் மகன் அங்கதனை அரசனாக்கி, எழுபதுவெள்ளம் வானர சேனைகளைக்கூட்டிக்கொண்டு அநுமானால் சீதையிலங்கையிலிருப்பதுணர்ந்துகொண்டு சேதுபந்தனஞ்செய்து இராவணன் கும்பகர்ணன் முதலியோரைச் சங்காரஞ்செய்து விபீஷணனுக் கிலங்காபுரி ராஜ்ஜியத்தை யளித்துப் பன்னிருவருடமுங் கழித்துப் புஷ்பக விமான மிவர்ந்து தந்நாட்டையடைந்து அரசுரிமையைக் கைக்கொண்டவர்.

இவரது இளமைப்பருவத்திலே யிறந்தோர் தாடகை முதலியோர். தண்டகாரணியத்திலே கரன் தூஷணன் விராதன் மாரீசன் முதலியோர். இராக்கதகுலத்தினை யொருகாலத்தில் மிக்கொழித்தவர். இவரது பாணந்தப்பாமற் கொல்லுந்தகையதாகலின இராமபாணமென இக்காலத்தும் வழக்கத்திற் சொல்வது காண்க.

இவர் ககுஸ்தன மரபிலுதித்தமையின் காகுத்தனென்றும், இரகுமரபினராகலின் இராகவனென்றும், தசரத குமாரராகலின் தாசரதியென்றும் இனேரன்ன பெயர்களெய்தியவர்.

திருமால் தேவாசுரர்கட்கு முன்னொருகால் நிகழ்ந்த யுத்தத்தில் தேவர்பக்கலில் துணையாகச் சென்று அசுரரை வருத்த, அசுரர் ஓடிச்சென்று பிருகு முனிவராச்சிரமத்தினு ணுழைந்து அம்முனி பத்தினியாகிய கியாதியென்பாளிடத் தடைக்கலம்புக, திருமால் அங்கேயுஞ் சென்று அவர்களைக் கொல்லவுடனுழைகையில், கியாதியைத்

மையின், தன் மாமியென்றுங் கருதாது அவள் சிரத்தைத் துணிக்க, அவள் கூவிக்கொண் டிறந்தனள். அதனால் பிருகு முனிவர் நிஷ்டைகலைந்து நடந்ததையுணர்ந்து திருமாலுக்குப் பத்துப் பிறவிகளுண்டாகவும் அவற்றுளொன்றில்மனைவியைப்பிரிந்து வருந்துமாறும் சபித்தனராகலின், இராமாவதாரத்தில் மனைவியைப்பிரிய நேர்ந்ததென்பது நூற்பிரமாணம்.* அன்றியும்,

ஜலந்தராசுரன் மனைவியாகிய பிருந்தையென்பாளுடைய பேரழகுக்கு மையல்கொண்டு அவள் கணவன் போலச் சென்று அவளைக் கூடி, அவள் கற்பினையழித்து, ஒருநாள் அவளுடன் கலந்திருப்ப அவள் அதனை யுணர்ந்து கொண்டு நீ தேவனாயிருந்தும் அசுரப்பெண்ணையவாவினமையின், உன் மனைவியையும் ஓரரக்கன் விரும்பிக்கொண்டு போக நீ யவளைப் பிரிந்திருக்கக் கடவையெனச் சபித்துத் தீயில் விழுந்திறந்தனள் [பிருந்தையிற் காண்க.] இதுகாரணமாகவும் சீதையைப் பிரிந்ததென்பர்.

இராமாநுஜாசாரியர் — விசிஷ்டாத்வைதமென்னும் வைணவமதத்திற்குப் பாஷியஞ் செய்தவர். இவர்ஜனனபூமி ஸ்ரீ பெரும்பூதூர். குலம் பிராமணர். பிதா ஆசூர்க்கேசவாசாரியர். தாய்-காந்திமதி. ஞானசிரியர் யாதவப் பிரகாசரென்னுஞ் சன்னியாசி.

இவர் சாஸ்திரவல்லுநராய் ஆசிரியன் முன்னரே விசிஷ்டாத்வைதத்தை ஸ்தாபனஞ் செய்து, திரிதண்டசந்நியாசியாய் யதிராஜரென்னும் பெயர்தாங்கி திருவரங்க முதலிய பல திருப்பதிகளையடைந்து ஆங்காங்கு திருமடங்கள் ஸ்தாபித்து வைஷ்ணவமதோத்தாரணமும் கீதாபாஷ்யம் தர்க்கபாஷியம் வேதாந்தசூத்திர பாஷிய முதலியனவுஞ் செய்தவர். இவரை வைஷ்ணவர்கள் ஸ்ரீ பாஷியக்காரரென்றும் எம்பெருமானாரென்றுங் கூறுவர்.

இராமாயணம்—இராமருடைய சரித்திரத்தையுணர்த்துவதோர் இதிகாசம். இச்சரிதநிகழுமுன்னே நாரத முனிவர் பிரமசபையில் நடந்தவற்றினைக்கூறக்கேட்டபடி வால்மீகி முனிவராற் கூறப்பட்டது. இந்நூற்கு முற்பட இதுபோல பத்தியகாவியமொன்றும் வடமொழியில் இல்லாமையின், இதனை ஆதிகாவியமென வழங்குவர்.

இது பாலகாண்டம் அயோத்தியா காண்டம் ஆரணிய காண்டம் கிஷ்கிந்தாகாண்டம் சுந்தர காண்டம் யுத்தகாண்டம் உத்தரகாண்டமென்னுஞ் சப்த காண்டங்களையும் இருபத்து நான்காயிரங் கிரந்தங்களுமுடையதாய், ஒவ்வோராயிர ஸ்லோகங்களின் முதலின் ஒவ்வொரு காயத்திரி மந்திராக்ஷரத்தினால் ஆரம்பிக்கப்படுவதாய அதனால் காயத்திரிரூபமென்றும் காரணப்பெயருடையதாய் விளங்கும். [காயத்திரியின் எழுத்துகள் இருபத்துநான்கு. இராமாயண கிரந்தங்கள் இருபத்துநான்காயிரம்]

இராமாயண சரித்திரத்தை வடமொழியில் போதாயனர் முதலிய

பல்வேறு முனிவர் செய்துளராகவுந் தெரியவருகிறது. ஹநுமந்தராமாயணம் அத்யாத்மராமாயணம் அற்புதராமாயணம் ஆநந்தராமாயணமுதலியனவும் இக்காலத்து வழங்குகின்றன.

இதனைத்தமிழ்க்கவி செய்தவர் கம்பர். இவர் கல்வியிற் பெரியவரென்றும், வைணவர்களாற் கம்பநாட்டாழ்வாரென்றும்புகழப்பெற்றவர். இவர்க்கு முதனூல் வான்மீகிராமாயணமென்பது அவர் கூற்றானே துணிவு. ஆயினும் கற்பனை யலங்கார முதலியன தங்கருத்தின் வண்ணமே செய்தவர் சீதாதேவியை யிராவணன் கொண்டுபோன சந்தர்ப்பமுதலிய சிற்சில விடங்களில் அபிமானத்தோடு செய்தவராதக் காணப் படுகிறார். இவர் காலம் "ஏர்கலி சகாப்தமெண்ணூற் றேழின்மேற் சடையன் வாழ்வு" என்னும் இராமாயணக் கவியால் உணரத்தகும். இவ்விராமாயணத்தில் உத்தரகாண்ட நீங்கிய ஆறும் இவராலும், அஃதொன்றுமே ஒட்டக்கூத்தப்புலவராலும் இயற்றப்பட்டன. இது மிக்க ஆழ்ந்த[illegible] பொருளுடைமையும், தன் கவிக்கும் கூத்தர் கவிக்கும் வேறுபாடறியு நிமித்தம் அவர் கவிதையை யிறுதியிற் சேர்க்கப்பட்டிருத்தலுங் கருதிக் கம்பசூத்திரமென்பர்.

கம்பராமாயணமன்றிச்சங்கத்துராமாயணமெனவொன்று பழைமையாக விருப்பினும் அது சாங்கோபாங்கமாகக்கிடையாததொன்றாய் மறைந்தது.

இராமாயணசரிதம் வெளிப்படையாகலின் விரித்தெழுதுவது அநாவசியமாயிற்று. சுருக்கம்இராமரிற்காண்க.

இராமேசுவரம்—இராமர் இராவணசங்காரஞ் செய்து திரும்புகையில் சேதுவினருகே சிவலிங்கப் பிரதிட்டை செய்து பூசித்தஸ்தலம்.

இராவணன்—இராக்கதரிற் பிரபலமாயிருந்தவன். இலங்கையிலிருந்து பலபேருக்குந் துன்பு செய்து முனிவர் முதலியோருடைய யாகாதிகளைத் தடைபடுத்தி வந்த கொடியோன். புலத்தியன்பேரன். விச்சிரவாவு மகன். இவன் தாய் கைகசி. மனைவி மயன்மகளாகிய மந்தோதரி. இவன் தம்பியர் கும்பகர்ணன் விபீஷணன் எனப் படுவோர். இவன் தங்கை சூர்ப்பணகை. இவன் மகன் இந்திரஜித்து. இவனுக்குத் தலைகள்பத்தும் கைகள் இருபதுமாம். தேவாசுரர்களாலிறவாவரம் பிரமனிடம் பெற்றவனாகலின் திக்கெல்லாம் ஜயங்கொண்டு குபேரனை யெதிர்த்துப் புஷ்பக விமானத்தைக் கவர்ந்துகொண்டு அதிலிவர்ந்து கைலைமலைக்கு நேர்வர, திருநந்திதேவர் கண்டுதடைபடுத்த, இக்கைலையை வேரொடு பறித்தெறிவேனெனக் கல்லுகையில், சிவபெருமான் பெருவிரலாலழுத்தத் துன்புற்று. நெடுங்காலங்கீழேகிடந்துவருந்தி, சிவபிரானைத்துதித்து தினின்று நீங்கிச் சென்றவன். இவன் அழுது துதி செய்தமையின் இராவணனென்னுங் காரணப் பெயரெய்தியவன்.

சிவப்பிரசாதத்தாலடைந்தஇலிங்கத்தைத் தனது இலங்கைக்குக் கொண்டு போகையில், தேவர்கள் அஃதங்குப்போய்ச் சேராதுதடுக்க விரும்பி, விநாயகக்கடவுளை அந்தணராக அவனருகே வரச்செய்து, வருணனால் அவன் வயிற்றினை நிரப்ப. அவன் ஜலஸ்பரிசஞ் செய்யவேண்டித் தன்பற்று அருகே வந்து கொண்டிருந்தஅந்தணனை சங்கரனைக்கண்டு, யான் இலங்காதிபதி இராவணன்.சிவப்பிரசாதமானஇவ்விலிங்கத்தைக்கொண்டு செல்கின்றேன் இது பூமியில் வைத்தால் மீண்டும் எடுக்கமுடியாது நீயிவ்விலிங்க மூர்த்தியைச் சிறிது தாங்குவையாயின் நீர்கழித்து ஏற்றுக்கொள்ளுவலென, அவர் யான் அவசரகாரியமாகச்செல்கின்றேன். விரைவில்வருக. மும்முறை விளிக்குமுன் வராதொழியில் நிலமிசை வைத்துவிடுவே னென்று பெற்றுக்கொண்டு, அவன் நீர்கழிக்குமுன்னரே இராவணா என்றுஒருமுறை இருமுறை மும்முறையுங் கூவி நிலமிசை வைத்து நடப்ப, அவன் ஜலஸ்பரிசஞ்செய்து கொண்டு இலிங்கத்தை யெடுக்க அது நிலத்திலூன்றி வராமையின் தன் பலங்கொண்டீர்ப்பப் பசுவின்காது போல் குழைந்து விட்டமையின் கோகர்ணேசுவரரென்றும் மகாபலலிங்கமென்றும் பேராகிவிளங்குவதாயிற்று. அதனை யெடுக்க முடியாமையின் விரைந்து சென்று வேதியனான விநாயகக் கடவுளுடன் மல்லயுத்தஞ் செய்து அவரால் தாக்கியெறியப் பட்டும் நன்கு புடைக்கப்பட்டும் இறுதியில் அவரை நிஜவடிவோடு தரிசித்துப் பத்துத்தலைகளிலும் இருபது கரங்களாலும் இடிமுழக்குபோலக் குட்டிக்கொண்டு மன்னிப்பு கேட்டு இலங்கைக்குச் சென்றவன். அகஸ்தியர்மனைவி உலோபா முத்திரையாரைக் காமுற்று, அகத்தியரால் தண்டிக்கப்பட்டுத் தமிழ் நாட்டிலிராவணம் போக்கப்பட்டவன்.

வாலி கார்த்தவீரியார்ச்சுனனெனுமிருவரால்அபஜயப்பட்டதன்றி வேறெல்லா விடத்திலும் வென்றி கொண்டே திரும்பியவன். இவன் மேருவின்பக்கலிற் சென்றபொழுது அரம்பையைப் பலாத்காரமாகப் புணர்ந்தனன். அதனையறிந்த நளகூபரன் இனி விருப்பில்லாத மாதரைப் புணர்ந்தால் தலைவெடித்திறக்கக்கடவை யென்றசாபத்தாலேயே சீதாதேவியை மானபங்கஞ் செய்தற்கஞ்சியவன். வேதத்திற்கு ஜடைகிரமஞ் செய்தவன்.

இராவணீயம்—இராவணனாற் செய்யப்பட்டதொரு நூல் இது இராகங்களைச் சாமவேதத்திற் பொருத்திபாடுமுறைமையை அறிவிப்பது

இரு—அதிதியின் நாமாந்தரம்.

இருகன்—விஜயன்மகன். இவன் மகன் விருகன்.

இருக்குவேதம்—வேதம் நான்கனுளொன்று. இஃதிருபத்தொரு சாகைகளையுடையது. வேதத்திற்காண்க. [மலை.

இருக்ஷகிரி—உதயகிரி, சூரியனுதிக்கு

இருக்ஷம்—ஒருமலை. இது மாளவதேசத்தருகிலுள்ளது.

இருக்ஷன்—(1) அஜமீடன் மக்களுள்

மூன்றும் புதல்வன் (2) புருஜன் மகன். இவன் மகன் பருமியாசுவன் (3) குருவமிசத்துத் தேவாதியின் மகன்.

இருக்கோவேள் — வடதிசையில் ஒரு முனிவருடைய ஓமாக்கினியி லுதித்துத் துவராபதியையாண்டு நாற்பத்தொன்பது தலைமுறை சென்று தொட்டுவந்தவேளிர்களு ளொருவன். மிக்ககொடையாளி. தவச்செயலிலிருந்த ஒரு பெரியோர்க்குத் துன்புசெய்யவந்த புலியை அவர் கட்டளையாற் கொன்று வீழ்த்தி அவர் தவத்தைக் காத்ததுபற்றிப் புலிகடிமா லென்றும்பெயரேற்றவன்.

இருசங்கன் — பேருசங்கன்.

இருசிகன் — ஓர்இருடி. ஔர்வன்புத்திரன். விசுவாமித்திரன தங்கை சத்தியவதியின் கணவன். ஜமதக்கினி முனிவனுக்குப் பிதா.

இருசுவரோமா — சுவர்ணரோமாவின் புத்திரன்.

இருதாமன் — யதுவமிசத்து வசுதேவனுக்கிளவல் இவன்பிதா ஆனகன்.

இருதத்வஜன் — காசிராஜன் மரபிலுதித்த பிரதத்தன்.

இருதவாக்கு — ஓர்இருஷி. தன் மகன் இரேவதி நான்காம் பாதத்திற்பிறந்து துஷ்டனானது பற்றிக் கோபமுற்று, அந்நக்ஷத்திரத்தைப் பூமியில் விழும்படி சபித்தவன்.

இருதன் — மிதிலையரசன். விஜயன் புத்திரன்.

இருதுபன்னன் - இக்ஷ்வாகுவமிசத்து அயுதாயுவன்புத்திரன். நளனைச்சிறிதுகாலம் இரதசாரதியாகக்கொண்டவன். இவன் விதர்ப்பநாட்டிற்குத் தமயந்தியின் இரண்டாஞ் சுயம்வரமென்று கேட்கடவிச்சென்றபோது அவனிடத்தில் அசுவஹிருதய வித்தையைத்தான் உபதேசிக்கப்பெற்று, தனக்குத் தெரிந்திருந்த அக்ஷயஹிருதய வித்தையை அவனுக் குபதேசித்தவன். இவன் மகன்சர்வகாமன்.

இருநிதிசகிழவன் — (1) குபேரன். (2) கோவலன் தந்தை. தனமகனிறந்ததாற்றாது துறவுபூண்டவன்.

இருபன் — பிரமமானசபுத்திரருளொருவன் இருஷபனென்றுஞ்சொல்லப்படுபவன். சிருஷ்டிசெய்ய உடன்படாமற் றபுதீதமையின பிரமன மீண்டும் பரீசி முதலாயினரைப் படைத்தனன.

இருபாவிருபஃது — சித்தாந்த சாத்திரம் பதினான்கனுளொன்று. பத்துத்திருவெண்பாக்களையும் பத்துத்திருவாசிரியங்களையு முடையது. பாசலக்ஷணத்தைப் பகுத்துக்கடாவிடையாக அருணந்தி சிவாசாரியராலருளிச்செய்யப்பட்டது [ரம்.

இருபுகூன் — இந்திரனுக்கு நாமாந்த

இருமலர்க்கண்ணம்மை — திருச்சாத்தமங்கையில் உமாதேவிக்கு வழங்குந் திருநாமம்.

இரும்பிடர்த் தலையார் — கடைச்சங்கப்புலவருளொருவர். சோழன்கரிகாலனுடையஅம்மான, அவனுக்கு மந்திரியும் பெருந்துணையுமாயிருந்தவர். இதனை "சுடப்பட்டுயிருய்ந்த சோழன்மகனும், பிடர்த் தலைப் பேராளைப்பெற்றே — கடைக்காற், செயிரறு செங்கோல் செலீஇயினன்" என்னும் பழமொழி 105ஆம் வெண்பாவானுணர்க. இவர்பாடிய

பாட்டுகள் எட்டுத் தொகையுட் சிலவுள. இவரால் பாடப்பட்டோர் பாண்டியன் கருங்கை யொள்வாட் பெரும் பெயர் வழுதி [மணிமே-புறநானூறு]

இரும்பூளை—ஒருநகரம். சோழநாட்டிலுள்ளது. இதற்கு ஆலங்குடியென்றும் பெயர்.

இருஷகிரி—ஒருமலை. மகதநாட்டில் வராககிரிக்கருகிலுள்ளது.

இருஷபம்—(1) சிவவாகனம்(2) திருநந்திதேவர் (3) இடபராசி.

இருஷபன்—(1) இந்திரனுக்குச் சசியிடம் பிறந்த இளையகுமாரன் (2 நாபி மகன். பரதன் முதலிய நூறு புத்திரரைப் பெற்றவன். (3) உபரிசரவசுவமிசத்தொருவன்(4 ஒரு பன் (5) சுக்கிரீவன் சேனைவீரரிலொருவானரன்.

இருஷிகள்-சத்தியதரிசிகள் இவர்கள் எழுவகையினராயுளர். அவருள,

இராஜவிருடியர்—உலகியல்நிலைநாட்ட இராச்சியத்தை நடத்திய மாந்தாதாபோன்றவர்.

சுருதவிருடியர் — வேதாத்தியனஞ்செய்து ஒவ்வொரு சாத்திரத்தைவெளியிட்ட சுசுருதர் போல்பவர் [சுசுருதர்-வைத்தியநூல் செய்தவர்]

காண்டவிருடியர்—வேதகாண்டங்கள் ஒவ்வொன்றில் வல்லுநராய் உலகர்க்கு அவற்றை யுணர்த்தும் ஜைமினிபோல்வார்.

பரமவிருடியர் — ஆன்மலாபத்தைக் கருதி உலகவின்பத்தை உற வொழித்த பைலராதியோர்.

மகாவிருடியர்— புத்திதத்துவங் கடந்து மகத்தத்துவம் வரையிற் சென்ற வியாசராதியோர்.

தேவவிருடியர்— ஆன்மலாபத்தை பரோசஞ்செய்து உலகினைக்காக்கத்தேவர்களே இருடிகளாக் அவதரித்த நாரதராதியர்.

பிரமவிருடியர்—நிர்க்குண பிரமோபாசனை செய்யும் வார்த்தைபசமுடையவசிஷ்டர் முதலியோர் எனப்பிரிக்கப்பட்டு விளங்குவர்.

இருஷிகள் சொல்லியவை ஆரிஷமெனப்படும் [ஆர்ஷம்=ருஷிப்ரோக்தம்] அவருரைப்பொய்க்காதென்பது உலகவழக்கு.

இருஷிகுலியை— ஒருநதி. இருஷபாவதத்திலிருந்து வருவது.

இருஷிகை—(1) ஒருநதி. மகேந்திரகிரியில் தோனறுவது (2)ஒரு பிராமணப்பெண். பாலவைதவ்யமடைந்த இவள் நருமதைநதிக்கரையிலுள்ள நந்திகேசுர மென்னுந்தலத்தில், பார்த்திவ லிங்கபூஜைசெய்து கொண்டிருந்து, தன்பூஜைக்கிடையூறு செய்தவக்கரூடனென்னுமரக்கனுக்கஞ்சி இறைவனைப் பிரார்த்தித்து அவனைச் சங்கரிப்பித்து முத்தியடைந்தவள். [சைவபு]

இருஷியசிருங்கன் — ஒருமகருஷி. விபண்டகாசிரமசைவ்யல, அந்நாரத்தில்ஒருபரஅட்சரசைக்கண்டுமோகித்துச் சுக்கிலத்தை நீரில் விட்டுவிட அச்சுக்கிலத்தோடு கலந்த ஜலத்தை ஒருபெண்மான்பருக அதனிடமாகப்பிறந்தவர்.

கலைக்கோட்டுமுனிவரெனப்படுவோருமிவரே. அங்கதேசத்தில்லெக்காலம் மழையின்மையால் பல்வகையான யாகமுதலியசெய்வித்தும் பயன்படாது, இறுதியில்இம

முனிவர்வரின்மழைபொழியுமெனக்கேட்டு, இவரைத்தன்னாட்டிற்கு அழைத்துவரவேண்டுமென்றதந்திரமாகச்சிலமாதரைவிடுப்ப, அவர்கள் சென்றுகண்டு இவரை வருமபடி விளிப்ப,ஒருபொழுதும்பெண்களையே கண்டிராதவ ராதலின் இவர்கள் இரண்டு கொம்புடையவர்களென்றுஉற்றுப்பார்த்து உங்களாச்சிரமம் எங்குள்ளது எனக் கேட்க, சமீபம் சமீபமென்று அழைத்துக்கொண்டு அங்கதேசத்தையடைய, உடனே பெருமழை பொழிந்தது கண்ட அரசன ஆனந்தபரவசனாகி, இம்முனிவரையடி பணிந்து தன்குமாரத்தியை மணஞ்செய்துகொளளும்படிவேண்ட, அங்ஙனமே விவாகஞ்செய்துகொண்டு சென்றவர். [சைவபு]

இருஷியமூகம்—கிஷ்கிந்தைக்கருகிலுள்ள ஒருமலை. சுக்ரீவன் தன் தமயனான வாலிக்குப் பயந்து சாபத்தால் அவன் ஏறக்கூடாமையின் மறைந்து வசித்த இடம். தசரதராமன் இவனுடன் நட்புக்கொண்ட இடமுமிதுவே.

இரேணுகாபீடம்—அறுபத்துநான்கு சத்திபீடங்களிலொன்று இதுமாதுபுரத்திலுள்ளது.

இரேணுகை—ஜமதக்கினி முனிவன் பாரி. பரசுராமனை பெற்றவள். இவள் ஜமதக்கினி முனிவன் கட்டளைபெற்ற பரசுராமனால் வெட்டப்பட்டவள். உலகத்தில் மாரியம்மையாகத் துதிசெய்யப் படுபவள்.

இரேவதர்—புத்தர்களில் எட்டாவதாகத்தோன்றியவர்.

இரேவதி—இரைவதபர்வதத்தில்தாமரையோடையிற் பிறந்தொருகன்னிகை இவள் பிரமசமுனிவர்வளர்க்க வளர்ந்தவள் இரைவதமனுவையீன்றவள் இரைவதத்திற் காண்க.

இரைவதம்—துவாரகைக்கருகிலுள்ளவொருபர்வதம். இரேவதி யென்பாள் இதனாற்கென்னு மிருடியாற் சபிக்கப்பட்டு இம்மலைமேல் வீழ்ந்து ஒரு சரசாயினமையின இப் பெயர் பெற்றது.

இரௌரவம்—(1)ஈராயிரயோசனைச் சதுரமாய் உருக்கிய செமபுநீர்மயமாய் மகாகொடும்பாவிகளை வருத்தமிடமானஒருநரகம். (2)இருபத்தெட்டுச்சிவாகமங்களிலொன்று. இது சிவபிரான் திருச்செவியும் ஆறு உபபேதமும், எட்டு அற்புதக்கிரந்தமுமாக விளங்கும். [ருத்தி.

இலக்கணை—சிவகன்மனைவியருளொ

இலக்குமணன் } இராம னிளவல்.
இலக்ஷ்மணன் } தசரதன் மனைவியரில் சுமித்திரையிடம் பிறந்தவன் இராமனிடத்துப்பரமபகதியும்விசுவாசமுமுடையவன். இவன் அவனிடத்துற்ற அன்பின மிகையாலேயே வனவாசத்தில் உடன் சென்று பதினான்கு வருடம் ஆகாரமும்நித்திரையுமின்றியிருந்தவன்

இலக்குமி } (1) திருப்பாற்கடலைக்
இலக்ஷ்மி } கடைந்தபொழுது அதிற்றோன்றியவர். பிரமன்புத்திரியென்றும் பிருகு புத்திரியென்றுஞ் சொல்லப்படுவர்.ஜ்யேஷ்டைக்குப் பின்பிறந்தகாரணத்தினால் இளையவளென்றும்சொல்லப்படுவர்.செல்வங்கட்கதிதேவதையாகலின் திருவென்றும் சொல்வதுண்டு. (2)சம்பன்மகள்.இவளைஉத்யானவனதி

த்கண்ட பிரத்யும்னன்கந்தர்வமண மாகக்கூடினதையுணர்ந்த சும்பன் இமாசலத்தில் விகஸ்தாநதிதீரத்தி ல்வச்சிரபஞ்சரத்திடையிட்டனன். துர்க்கையால் அஃதுடைக்கப்பட்டு ப்பிரத்யும்னன்காக்கப்பட்டதுடன் சும்ப நிசும்பர் சொல்லப்பட்டார் கள். [சைவபு] (3) இரவிவன்ம னுக்கு அமுதபதிவயிற்றிற் பிறந் தவள். தாரைவீரைகளின் தங்கை. இராகுலன் மனைவி. திட்டி விட த்தாற் கணவனிறந்தவுடன் தீயிற் பாய்ந்து உயிர்நீத்தவள். சாதுசக் ரனென்னுமுனிவனுக்கு உணவளி த்த புண்ணியத்தால் இவளேமணி மேகலையாகப் பிறந்து பௌத்ததர் மங்கேட்டவள் [மணிமே]

இலங்காதேவி—தக்ஷன்புத்திரி. தரு மன்பாரியை. லம்பை யென்றும் பெயர் பெற்றவள்.

இலங்காபுரி } இலங்கை } தென்கடலில் விசுவகர் மனால் நியமிக்கப்பட்ட தொருதீபம். இந்நகரம் முதலில் மாலியவானுக்கும், பின்னர்குபேர னுக்கும், அவனிடத்திருந்து அபகரி க்கஇராவணனுக்கும் இராஜதானி யாய்க் காலாந்தரத்தி லிருந்தது. இ தைச்சேர்ந்த நாட்டுடன் எழுநூறு காதவிஸ்தீரணமென இராமாயண த்தாலறியப்படும். இதுகடல்கொள் ளப்பட்ட தென்றும் இதிலொரு கூறே இப்பொழுதுள்ள தென் றும் சொல்லுகிறார்கள். அன்றி யும் கயவாகுவென்னும் அரசனுக் கு இராஜதானியா யிருந்த தென் று சிலப்பதிகாரத்தால் விளங்கு கிறது. இது அநுராதபுர மென் னும் பெயர் பெறும். இரத்தின தீவமெனும் புத்தபீடிகை யிருந்த விடமென மணிமேகலைகூறும்.

இலங்கினி—இலங்கையைவடதிசை யில் காத்து அநுமனாற் கொல்லப் பட்ட முதற்பலியான அரக்கி.

இலங்கை—இலங்காபுரி.

இலஞ்சிமன்றம் - காவிரிப்பூம் பட்டி னத்துள்ள ஐந்துசபையுளொன்று. இதிற் பலநோய்களையு மகற்றும் பொய்கை யொன்றுளது [சிலப்]

இலாவந்தன்—அர்ச்சுனன்மகன்- இவ ன்தாய் உலூபி.

இலிங்கபுராணம்—சிவ புராணங்கள் பத்தனுளொன்று-பதினோராயிரங் கிரந்தங்களை யுடையது- மிகநுட் பமான விடயங்களையும் சிவமகி மைகளையுஞ் சொல்வது- இது தமி ழில் வரதுங்க ராம பாண்டியனால் செய்யுள் நடையில் மொழி பெயர் க்கப்பட்டுளது.

இலிங்கம்—பரசிவம் ஆன்மாக்களின் தியானபாவனைநிமித்தம் நிட்கள சகளத் திருவுருக் கொண்ட நிலை. அதின் பிண்டிகை யானது சத்தி யுருவம். இலிங்கம் சிவரூபம். ஆக வே, இலிங்கம் ஞானசத்தி வடி வம். பீடம் கிரியாசத்தி வடிவம். இவ்விரண்டுஞ் சிவ னதிஷ்டிக்குந் தேகம். இத்தேகத்தை யதிஷ்டித் துள்ளவனாகிய பரசிவன் இலிங்கி யாம். முன்னர்க் கூறிய அவ் விலி ங்கம், வியக்தம்-வியக்தாவ்யக்தம்- அவ்யக்த மென மூவிதமாம். அவற் றுட் சந்திரசேகரர் முதலிய பல திருவுருவங்களையுடைய சகளவுரு வமே வியக்தம். சகள நிஷ்களமே வியக்தாவ்யக்தம். நிஷ்களமேஅவ் யக்த மெனப்படு. இனி வியக்தாவ்

யக்தம் சிலுலிங்கவுருவமாம். அதன்
திருவுருவில் விருத்தமே ருத்ரபா
கம். பீடத்தின் அதோபாகத்தின்
அடிநான்கு மூலை பிரமபாகம். நடு
வின் எட்டு மூலை விஷ்ணுபாகம்
இவற்றுட் பிரமபாகம்நபும்சகலிங்
கம். விஷ்ணுபாகம் ஸ்திரீலிங்கம்.
உருத்திர பாகம் புல்லிங்கமாம்.
இதுவே பிரணவ முதற்பொருள்
இதன்சோதியுருவமேமகாரஅகார
உகாரமா யிருக்கும். அகார வாச்
சியமே சிவம். உகாரவாசியமே
சத்தி. மகாரவாச்சியமே பரம் என
வும், அகாரம் நாதம், உகாரம் வி
ந்து, மகாரம் கலை எனவும், வேத
ங்கூறும். இவை சிவனது அவ்ய
க்தஉருவாகிய நிஷ்களம். இவ்வோ
ங்கார சிவசத்தி லிங்கத்திற் சதா
சிவாதியர் தோற்ற லயமாவர்.

நிவர்த்தியே முதலான பீடமும்,
தொழி லறுதியான கர்த்திருமுத
லான லிலிங்கமும், கன்மசாதாக்கி
யமானலிலிங்கமும், சாந்தியதீதை
யான நான்கும், தந் தொழில்களை
யுள்ளடக்கித் திரண்ட குடிலாபீ
டத்து வியாபினி முதலிய சத்திக
ளாற் பிரேரிக்கப்பட்டுள்ள இந்தி
கை யாதியாய் நாதகலைக ளொத்தும்
பொருந்தின இடம் நாதமயமான
இலிங்கமாம்.

இது அழிவில்லாப் பொருள்கட்
கெல்லாமாதாரமாய் அழிபொருள்
களை யதிஷ்டிப்பித்திருப்பது இது
பஞ்சமூர்த்திகளுடைய ஒருமைப்
பாட்டினுண்டாதலாலும், அண்ட
த்துட் பிண்டங்கட்குயிராய் நிற்ற
லாலும், பிண்டிகை யெனப்பட்ட
பீடத்தில் எழுந்தருளி யிருத்தலா
லும், பிண்டமான சத்திதானே
திருமேனியாதலாலும், கருணைநிலை
யான நிஷ்களமும் பெருமையுற்ற
சகளமுந் திரண்டு பிண்டமென்
னும்பெயரையுடையதாயிருக்கும்.

பிரம விஷ்ணு ருத்திரரை யதி
ஷ்டிக்கப்பட்ட பீடமும், அதற்கு
எதுவான மஹேஸ்வரரை யதிஷ்
டிக்கப்பட்ட கல்வபத்திரமும்,இவ்
வகைய சிவபீடத் தெழுந்தருளி
யிருக்குஞ் சிவமூர்த்தியான சதா
சிவமும், அவர் திருமுகமுதலிய
திருவுறுப்புகளை யதிஷ்டிக்குஞ்சிவ
சத்தி கிரியைகளாகிய வித்தியா
தேகமும், அதற்கு மூர்த்திமானா
கிற சிவோபாதி ஐந்தும், அபர
நாதம் அபரவிந்துவையும் பரநா
தம் பரவிந்துவையும் அதிஷ்டி
க்கப்பட்ட சாதாக்கியமெனறுபெய
ருற்றதே இலிங்கம்.

பின்னும் சிவபெருமான் அதி
காரத் தானமாகிய சதாசிவரெழு
ந்தருளியிருக்கும் பதுமத்தின் கிழ
க்கு பிரமாண்டமாகிய பிரிதிவித
த்துவம். அப்பு முதலிய கலையீறா
கச் சொல்லிய இருபத்தொன்பது
தத்துவமும் நாளம். அமரேசமுத
லிய புவன மெழுபத்திரண்டும்
நாளத்தின் கண்டங்களாகிய முள்
ளுகள். புத்தி குணமாகிய பஞ்ச
சற்பாவம் நாளத்தின் சூத்திரமா
னநூல். புறவிதழைச் சுமந்துநிற்
கும் முடிச்சுப்படம் மாயாதத்து
வம். உள்ளிதழ் சுத்தவித்தியா தத்
துவம். சுத்தவித்தியா புவனகலா
சத்திக ளறுபத்து நான்குங் கன்
னிகை. கலை யறுபத்துநான்குங்
குண்டலி. வித்தை ஐம்பத்தே

ரதாரம். வட்டம் நான்கும் ஞானங் கிரியை-யிச்சையாதி சத்திகளால் வியாபிக்கப்பட்டசூரியன் சந்திரன் அக்கினி மண்டலமாம். பிருதிவி முதலிய முப்பத்தொரு தத்துவங் களையு மதிஷ்டிக்குஞ் சுத்தவித் தையினுடைய வியாத்தியான சத் திமண்டல மென்னும் அபரவிந்து அபரநாதம், பரவிந்து, பரநாதமா யிருப்பது சிவாதநமாம். சுத்ததத் துவ மிருபத்துமூன்றும் இவற்றை யதிஷ்டிக்கும் சமனை யுன்மனை களு திருமேனியாம். இவ்வகைப் பெருமை யுற்றதே தியானலிங்க மாம்.

இலிங்=லயம், கம்=தோற்றம்; ஆகவே சிருஷ்டியாதி பஞ்சகிருத் யத்தைச் செய்யு மீசுரப்பிரபாவம் இலிங்க மெனப்படும் விரிவுசிவாக மங்களிற் கண்டுணர்க.

இலிங்கோற்பவம்—சிவமூர்த்தங்கள் அறுபத்து நான்கனு ளொன்று, பிரமனும் திருமாலும் நான் பெரி யன் நான் பெரியனென இறுமாந் தபோது அவர் மமதையை யகற்ற அக்கினித்தம்பமாய்த் தோன்றிய தொரு மூர்த்தி.

இறிக்கட்பெருங் கண்ணனார்—கடைச் சங்கப் புலவரு ளொருவர் - இவர் பாடல் திருவள்ளுவ மாலையிலொ ன்று காணப்படும்.

இளங்கண்டீரக்கோ - கண்டீரக்கோ வின்இளவல். இவனும் இளவிச்சிக் கோவும ஒருங்கிருக்கையில் அங் குற்ற பெருந்தலைச் சாத்தனார் இவ னைமட்டும தழுவ, அவன் இப்ப டிச் செய்த தென்னென, அவர் இவன் மேன்மையைப் புகழ்ந்து பாடினர்- [புறநானூறு]

இளங்குமணன் — குமணன்தம்பி - தன்தமயனாகிய குமணன் சிறந்த கொடையாளி யாதலின் அவன் மேற்பகைமையுற்று, அவன் நாட் டைக் கைப்பற்றி அவன் வனத்தி லொளித்திருக்கையில், அவனைக் கொல்லக்கருதி, பெருந்தலைச்சாத் தனரால் அப்பகைமை யொழியப் பெற்றவன் [புறநானூறு]

இளங்கொம்பம்மை — (1) திருக்கரு ப்பறிய லூரிலும் (2) திருப்பறிய லூரிலும உமாதேவியாருக்கு வழங் குந்திருநாமம்.

இளங்கோசர்— கோங்குநாட்டரசர்.

இளங்கோவடிகள் } இளங்கோவேந்தன் } மலை நாட்டில் வஞ்சிநகரத்தி லிருந்து அரசுசெய்த சேரலாத னென்னும் அரசன் புத்திரர். சே ரன் செங்குட்டுவன் தம்பி - இவர் முதலில் இளங்கோ வேந்தனென் றும், இளங்கோவென்றும், துறவு பூண்டமையாற்பின்னர் இளங்கோ வடிகளென்றும் பெயர் பெற்றார். சிலப்பதிகார நூலாசிரியர் இவரே. இவரைச் சேரமுனியென்றுங்கூ றுவர். மதுரைக் கூலவாணிகன் சாத்தனார் மணிமேகலையை யிய ற்றி இவரைக் கேட்பித்தாரென்று மணிமேகலைப் பதிகந் தெரிக்கின் றது.

இளங்கோன்—உதயகுமாரன் [மணி]

இளஞ்செழியன் — கொற்கை நகர த்தரசன். இவனுக்கு வெற்றிவேற் செழிய னென்றும் பெயருண்டு.

இளஞ்சேட்சென்னி - கரிகாற்பெரு வளவன் தம்பி.

இளந்திரையன் - காஞ்சி நகரத்தி

விருந்த ஓரரசன். நாகபட்டினத்துச்சோழன் பிலத்துவாரத்தால் நாகலோகத்தே சென்று நாககன்னிகையைப்புணர்ந்த காலத்து, அவள் யான் பெற்ற புதல்வனை என்செய்வேனென, தொண்டை [ஒருகொடி]யை அடையாளமாக் கட்டிக் கடலிலேவிட, அவன் வந்துகரையேறின், அவனுக்கு யான் அரசவுரிமையை எய்துவித்து நாடாக்கி கொடுப்பலெனக்கூற, அவளும் அவ்வனம் வரவிடத் திரைதருதலின் திரையனென்பது இவனுக்குப் பெயராயிற்று. இவன் மீது தான் பெரும் பாணாற்றுப் படை செய்யப்பட்டுளது.

இளமுலையம்மை — திருவோத்தூரில் உமாதேவியாருக்கு வழங்குந் திருநாமம்.

இளம்பூரணர் — பேராசிரியருக்கு மாணவரும்,நச்சினார்க்கினியருக்கு வித்தியா குருவுமாயுள்ளவர். இவராலே தொல்காப்பியத்திற்கு உரையொன்றெழுதப்பட்டது. அதிலுள்ள எழுத்ததிகாரம்சிறப்புடையது. இதுபற்றியே "எழுத்துக்கிளம்பூரணம்" எனவும் வழங்குவது பிரசித்தம்.

இளம்பெருமானடிகள் — பதினொன்றாந்திருமுறையில்,சிவபெருமான் திருமும்மணிக் கோவையியற்றியவர்.

இளவிச்சிக்கோ — விச்சிக்கோவின் இளவல். இவன் பெயர் இளவச்சிரக்கோவெனவும் வழங்கும். இளங்கண்டீரக்கோவிற்காண்க.

இளவெளிமான் — வெளிமானுடைய இளவல். வெளிமானிறந்தபின்னர், பெருஞ்சித்திரனார் வந்து பரிசில் கேட்க, மிகச்சிறி தளித்தமையின் அவராலவமதித்துப் பாடப்பெற்றவன் [புறநானூறு]

இளாவிருதவருஷம் — நவவருஷங்களிலொன்று - மேருவைச் சூழ்ந்துள்ளது. இதனைச்சூழ்ந்துள்ளது சுத்தநீர்க்கடல்.

இளாவிலை } திரணவிந்துவின்மகள்
இளாவிளை } இவள்தாய் அலம்பசை. கணவன் விச்சிரவசன் - மகன் குபேரன்.

இளை — (1) தக்ஷப் பிரஜாபதியின் புத்திரி. காசியபன் மனைவியர்பதின்மூவரு ளொருத்தி ஜலசாங்களைப்பெற்றவள். 2) வைவசுவதமனுவின் புத்திரி. புதன்மனைவி. புரூரவனைப் பெற்றவள். திருமால் கருணையால் ஆண்வடி வேற்றுச் சுத்யும்னனானவள். (3) யதுவமிசத்துவசுதேவன்மனைவி.

இளையாழ்வான் — வைணவசிவகாசனாதிபதிகள் எழுபத்து நால்வருளொருவர்.

இளையான் குடிமாற நாயனார் — அறுபான் மும்மை நாயன்மார்களுளொருவர். இளையான்குடியென்னு மூரிலே மாறனென்னுந் திருநாமத்தோடு வேளாண்மரபி லுதித்துச் சிவனடியார்க்குத் திருவமுது செய்விப்பதே கடமையாகக் கொண்டொழுகி, சிவபெருமான் இவரைச்சோதித்தற்காகும் பெருமிடியிலிருத்தியும், தமது கொள்கை மாறாது கடன்பட்டும் சிவனடியரையுபசரித்து வருகையில், ஒருநாள் பெருமழை பொழியு மிரவில் இறைவனொரடியவருருவேற்று இவர்

வீட்டிலேயடைந்து உணவுவேண்டுமெனக் கூற, அவரை யுபசரித்திருத்தி, பகல் வித்திய நெல்லினைக்கழனியிற் சென்று கூடையிற் றூவகி யேற்ற, பாத்தி நிரம்பா இளங்கீரையுடன் கொண்டுவந்து மனைவியார்கொடுப்ப, அவர் அந்நெல்லினை வறுத்துப்பதஞ்செய்து அரிசியாக்கிச்சமைத்து, கீரையைப்பதார்த்தமாக்கிப் பெரியாருக்கு உணவளிப்ப, சிவபெருமான்பக்தி முதிர்ச்சிக்காகக்களிகூர்ந்துமுத்தியளிக்கப் பெற்றவர்.

இறையனாரகப்பொருள் — ஓரிலக்கண நூல். இதுகளவியலென்றும் பெயர்பெறும் இதனை யியற்றினார் மதுரைச் சோமசுந்தரக் கடவுளென்னும் இறையனாராகலின் இஃதிப் பெயரோறது. இதற்குரை செய்தார் மதுரைக் கணக்காயனார் மகனார் நக்கீரனார். இது அறுபது சூத்திரங்களை யுடையது. இதன் அருமைபெருமையையும், இதுசெய்யப்பட்டதற்குக் காரணத்தையும் "உலகியனிறுத்தும் பொருண்மரபொடுங்க, மாறனும் புலவரு மயங்குறு காலை, முந்துறம் பெருமறை முளைத்தருள் வாக்கா, லன்பினைந்திணையென் றறுபது சூத்திரம், கடலமு தெடுக்குவகரையில் வைத்ததுபோல், பரப்பின் றமிழ்ச்சுவை திரட்டிமற்றவர்க்குத், தெளிதரக் கொடுத்த தென்றமிழ்க்கடவுள்" எனவரும் கல்லாடம் 5 - ம் ஆசிரியத்தானுணர்க.

இறையனார் — மதுரைச் சோமசுந்தரக் கடவுளின் கூறாகிய ஒருபுலவர். இவர்கடைச் சங்கத்திருந்தவர். இவராற் செய்யப்பட்டது அகப்பொருளிலக்கணம்.

இனன் — சூரியன்.

இனியவைநாற்பது -- சங்கமருவியபதினெண்கீழ்க்கணக்கினு ளொன்று இனியவிடயங்களையெடுத்துக்கூறு 'நாற்பது வெண்பாக்களாலானது, இதனை யியற்றிய புலவர் பூதஞ்சேந்தனார்.

இன்னாநாற்பது — சங்கமருவிய பதினெண் கீழ்க்கணக்கினுளொன்று இன்னாதனகருமங்கள் செய்யாது ஒழிக்கப்படவேண்டுதலின் அவையிற்றென உணர்த்திய நாற்பது வெண்பாக்களாலாகிய நூல், அளவையாலும் வந்த பெயர். இதனை யியற்றினார் கபிலதேவர்.

ஈ

ஈசாண்டான் — வைணவ சிங்காசனாதிபதிகள் எழுபத்து நால்வருளொருவர்.

ஈசானம் — சிவபெருமானது ஐந்து திருமுகங்களிலொன்று. இது உச்சிமுகமுமதென்கீழ்த்திசையைநோக்குவதும் வெண்ணிற முடையதுமாம்.

ஈசானன் — (1) சிவபெருமான். (2) அட்டதிக்குப்பாலகருள் வடகீழ்த்திசைக்காவலன். (3) ஏகாதசருத்திரருளொருவன்.

ஈசுவரராஜன் — கிருஷ்ணதேவராயர்பாட்டன்.

ஈசுவரன் — கடவுள் [ஐசுவரியமுடையான் என்பதுபொருள்] சைவர் சிவபெருமானென்றும், வைணவர் திருமாலென்றும், ஸ்மார்த்தர் பிரமமென்றும், விறமதத்தினர் தத்தங்கட

வுள ரென்றும் ஈசசத்தத்திற்குப்
பொருள்செய்வர்.

ஈச்சம்பாடியாச்சான் — வைணவசிங்
காசனாதிபதிகள் எழுபத்து நால்வ
ருளொருவர்.

ஈட்டி யெழுபது — ஒட்டக்கூத்தப்
புலவரியற்றிய எழுபது செய்யுட்
களாலாகிய ஒரு ஜாதிநூல். இது
செங்குந்தர்களாகிய தம்மினத்தவர்
தங்கள ஜாதியைச் 'சிறப்பித்துப்
பாடும்படி புலவரைக்கேட்ப, அவர்
அதுகாரணமாக எவ்வளவு செல்வ
மளிப்பினும்பெறேன. ஒருதாய்க்
கொருமகனாயுள்ளவரில் எழுபது
பேர்களின் தலையைப்பரிசளித்தா
லங்ஙனஞ்செய்வேனென, அது
கேட்ட அம்மரபினர் நகரங்கடோ
றும் ஓலைபோக்க, அதைவாசித்து
அப்படி யுள்ள ஒவ்வொரு வரும்
தங்கள் தங்கள் தலைகளை வெட்டிக்
கொள்ள, எழுபது தலைகள் ஒரு
சேரக்கூத்தரிடம் கொடுவர, கூத்
தர்குலோத்துங்கசோழன சபைக்
குக் கொண்டுபோமபடிசெய்து அவ
ற்றைச்சேர்த்து அதனமீது பீடமி
ட்டுத்தாமிருந்து, தமது கையிலிரு
ந்த ஈட்டியை முனைநிலை யாக்கி,
எழுபது செய்யுளகளால் செங்குந்
த மரபினைச்சிறப்பித்துக்கூறியது
இதுபாடி முடிந்தபின்னர் எழுப்
பெழுபது என எழுபதுசெய்யுட்க
ளாலாகிய தொருநூல்செய்து அத்
தலை கொடுத்தவர்களை யெழுப்
பியதாகச் சொல்லுப - அந்நூல்கி
டைத்திலது. ஆயினும் அதிலோர்
பாடல் "கலைவாணிநீயுலகி லிருப்
பதுவுங் கல்வியுணர் கவிவல்லோ
ரைத், தலையாகக் காப்பதுவு மகா
நாவில் வாழ்வதுஞ் சத்தியமேயன்
றோ, சிலைவாணனுவிருந்தாயிரம்
புயங்கடுணிந்துமுயாசீவனுற்றான்,
தலையாவி கொடுத்திடுஞ்செங் குந்
தருயிர் பெற்றிடநீ தயைசெய்வா
யே" எனக்காணப்படுகின்றது -
இம்மரபினர் இதுகாரணமாகச்சிர
சிங்காசனபதிக ளென்றுஞ்சிறப்பு
ப்பெயரேற்றனர்.

ஈயுண்ணியாண்டான் — வைணவசி
ங்காசனாதிபதிகள் எழுபத்து நால்
வருளொருவர்.

ஈர்ந்தூர்கிழான் தோயன்மாறன் —
இவன் சிறுசெல்வனெனினும், பரி
சிலர்க்கு இல்லையெனாது கொடு
த்தவன். தன்மன்னனுக்குற்ற துன்
பங்களைக் களைந்து பகைவரைவெ
ல்லும் வீரமுடையான். கோனா
ட்டு எறிச்சிலூர் மாடலன் மதுரை
க்குமரனாற பாடப் பெற்றவன்
[புறநானூறு]

ஈழம் — ஒருதேசம் - இது சோழ
பாண்டி நாடுகளின் தெற்கேயுள்ள
கடல்சூழ்ந்த ஒருதீபம். முதலிற்கு
பேரனும, அதன்பின்னா இராவ
ணன் முதலியவிராக்கதரும், அதன்
பின்னர் சோழராஜ பரம்பரையின
ரும் அரசுபுரிந்தவிடம். இது இல
ங்கைத்தீவென்றும், [சிம்ஹளம் =
(இலவங்கப்)பட்டை] சிம்ஹளத்தீ
வென்றும், சேரத்துவீபமென்றும்
சொல்லப்படும். இத்தேசத்தில்சிங்
களர் மிகுதி. பௌத்தமதமும் கிறி
த்தவமதமுந் தலையெடுத்துள்ளன.
சைவசமயமும் சிற்சிலவிடங்களில்
இப்போதுள்ளது. திருக்கேதீச்ச
ரம் திரிகோணமலையெனுஞ் சிவஸ்
தலங்களும், கதிர்காம மென்னுஞ்

சுப்பிரமணியத்தலமும் அங்கிருத்தலே அத்தேசத்திற்குச்சிறப்பு. ஈழமெனுஞ் சொற்குப்பொன்னென்றும் கள்ளென்றும் பொருள்களுளவாகலின் அங்குள்ள சிலர் பொன்னுடைத்தென்றும், வேறசிலர் கள்ளைமிகுதியாக வுடைய நாடென்றும் கூறுவர்.

**ஈளினன்** — பூருவின் வமிசத்துதித்த ரைப்பியனுக்கு நாமாந்தரம்.

## உ

**உக்கலம்மாள்** — வைணவசிங்காசனாதிபதிகள் எழுபத்துநால்வருளொருவர்.

**உக்கலாழ்வான்** — வைணவ சிங்காசனாதிபதிகள் எழுபத்துநால்வருளொருவர்.

**உக்கிரகுமாரபாண்டியர்** — தடாதகைப்பிராட்டியார் குமாரர். மதுரையிலரசுபுரிந்த நான்காம்பாண்டியர். இவர் சோமசுந்தரபாண்டியரால் வேல்வளைசெண்டு கொடுக்கப்பெற்று, இந்திரன் முடிமேல் வளையையெறிந்தும், கடல்சுவற வேல்விட்டும், மேருவைச்செண்டாலடித்துப் பொருள்கொண்டும் விளங்கியவர். மேகங்களைத் தளையிட அவற்றைவிடின் மழைபெய்விப்பனென்று கூறி இந்திரன்வேண்டிக்கொள்ளவு மிணங்காது ஒரு வேளாளன்பிணையிருப்ப அவற்றைச்சிறைவிடுத்தவர். இந்திரனாலணியப்பெற்ற பெரிய தோராரத்தினைத்தாங்கினமையின் ஆரந்தாங்குபாண்டியனென்றுஞ்சொல்லப்பெற்றவர். மனைவி - சூரியகுலத்துச் சோமசேகரன் மகள் காந்திமதி. உக்கிரகுமாரபாண்டியரைப்பற்றி சிலசரிதைகள் சிலப்பதிகாரத்துங் கூறப்பட்டுள.

**உக்கிரசிரவன்** - சூதகுலத்துதித்தவன் ரோமகர்ஷணன் மகன். சௌனகாதிகளுக்குஎல்லாப்புராணங்களையுமுபதேசித்தவன். இவன் புராணஞ் சொல்லிக் கொண்டிருக்கையில், ஆங்குற்றபலராமனைக்கண்டு மரியாதை செய்யாமையின் வெகுண்டு தன்கையிலிருந்த தருப்பையால் இவனைக்கொன்று வீழ்த்திச்செல்ல, முனிவர்கள் அவரை வேண்டிக்கொள்ள அவராலெழுப்ப உயிர்பிழைத்தவன்.

**உக்கிரசேனபாண்டியன்** — மதுரையையாண்ட முப்பத்தேழாம்பாண்டியன். இராஜபயங்கரபாண்டியனுக்குப் பின்வந்தவன்.

**உக்கிரசேனன்** — (1) யதுகுலத்துத் தேவகன் தமையன். (2) குருகுலத்து அபிமன்னுவின் பேரன். ஜனமேஜயனுக்கிளையவன் (3) கிருஷ்ணன் மரபில்யாத சுவாகுவின் புதல்வன்.

**உக்கிரபீடம்** — சத்திபீடங்கள் அறுபத்துநான்கனுளொன்று. இது கனகத்திலுள்ளது.

**உக்கிரப்பெருவழுதி** — கடைச்சங்கமிரீஇய பாண்டியருளொருவன். கானப்பேரெயில் கடந்த உக்கிரப்பெருவழுதியிற்காண்க.

**உக்கிரவர்மன்** — உக்கிரகுமாரபாண்டியனிற் காண்க. இது நாமாந்தரம்.

**உக்கிரன்** — (1) சிவன். (2) வீரபத்திரன் (3) குமாரக்கடவுள் துணைவரான இலக்ஷவீரருளொருவன்.

**உக்கிராயுதன்** — கிருதிபத்திரன். சந்த

னுமாய்ந்தபின்னர் அவன் மனைவி சத்தியவதியைக் கவர்ச்சென்று வீடுமனுலிறந்தவன்.

உசத்தியன்—ஒருமுனிவன். மிருகண்டுவின் மனைவியாகிய விருத்தையின் பிதா.

உசீநரன்—மநுவின் ஜேஷ்டகுமாரன் இவன்மகன் சிபி. உசீநகரத்தான்.

உசீரபீஜம்—ஓரூர்-இவ்விடத்தில் அவீக்ஷித்துவின் புத்திரனுனமருத்துமகாராஜன் ஒருயாகஞ்செய்தனன.

உசேநசு—வேதசிரசுவின் புததிரன்.

உச்சிவரதநாதர் — திருக்கற்குடியில் சிவபெருமானுக்கு வழங்குந திருநாமம்.

உச்சைச்சிரவம் — திருப்பாற்கடல் கடைந்தபோது அதிலுதித்த ஒரு வெள்ளைக்குதிரை இது இந்திரனுக்குக்கொடுக்கப்பட்டது.

உஜ்ஜைனி } அவந்திநாட்டின் தலை
உச்சயினி } நகரம். பிரச்சோதனனென்னும் அரசன் இராஜதானி [மணிமேகலை] அவந்தியிற்காண்க.

உஞ்சை — உச்சயினியின் பரியாயநாமம்.

உண்மைநெறிவிளக்கம் — சித்தாந்த சாத்திரங்கள் பதினன்கனுளொன்று ஆறுதிருவிருத்தங்களையுடையது. உமாபதி சிவசாரியரருளிச்செய்தது.

உண்மைவிளக்கம்—சித்தாந்தசாஸ்திரம் பதினன்கனுளொன்று. ஐம்பத்துநான்கு திருவெண்பாக்களையுடையது. தத்துவங்களைத் தசகாரியமுறையாக, திருவதிகை மனவாசகங்கடந்த தேவநாயஞ்ரவருளிச்செய்யப்பட்டது. [மகன்.

உதக்ஸேனன் — விஷ்வக்சேனன்

உதங்கன்—ஓரிருடி. பைலவமுனிவரிடன் குருபத்தினிக்குக கொடுக்கக்கருதிப்பௌஷியராஜன் மனைவியிடத்தில் யாசித்துப்பெற்ற குண்டலத்தை, நாகராஜனுன தக்ஷன் அபகரித்துக்கொள்ள மிகப்பிரயாசப்பட்டு அதனை மீட்டும்பெற்றுக் குருபத்தினிக்குக் கொடுத்தவன் இது காரணமாகச் சர்ப்பங்களைக் கொல்லவேண்டுமென்று கருதிச் சர்ப்பயாகஞ்செய்ய ஜனமேஜயனை ஏவியவர்.

உதத்தியன்—அங்கிரசன் புத்திரன். சகோதரன பிருகஸ்பதி. மனைவி மமதை தீர்த்தகதமனுக்குப்பிதா.

உதயகிரி— 1) சூரியனுதிக்கும்மலை இருக்ஷகிரியெனனுஞ் சொல்லப்படும் (2) நெல்லூர் ஜில்லாவிலுள்ள ஒருமலை.

உதயகுமரன்—காவிரிப்பூம்பட்டினத்தரசனுன நெடுமுடிக்கிள்ளியின் மகன் மணிமேகலையிடம் விருப்புற்று அவளிடம் பலமுறை சென்று இறந்தபின்னின்றவன். முடிவில் அவள் காயசண்டிகையென்னும் வித்தியாதரமங்கையின் வடிவங்கொண்டுநிற்பு, அவ்விடத்துச் சென்று அவ்வித்தியாதரமங்கையின் கணவனுகிய காஞ்சனனென்பவனுடைய வாளால் வெட்டுண்டிறந்தவன். இவன் பெயர் இளங்கோனென்றும் வழக்கும் [மணி]

உதயணகுமாரகாவியம்—வத்ஸதேசத்தரசனுன உதயணகுமாரனுடையசரித்திரத்தைக்கூறும் தமிழ்நூல் இது ஐந்துகவிகளையுடைய பாயிரத்தையும், ஆறுகாண்டங்களையுமுடையது. அவை உஞ்சைக்காண்

டம், இலாவாணகாண்டம், மகத காண்டம், வத்தவகாண்டம், நரவாகன காண்டம், துறவுக்காண்டம் என்பன இதனை. "உஞ்சையினிக் காண்டத்திலுயர்கவிநூற்றீரெட்டு, மிஞ்சவேயிலாவாணத்தின் வீறுயர் முப்பதாகு, மெஞ்சலின் மகத காண்ட மெயிலுடை முப்பத்தைந்தே மைஞ்சுட லைம்பதாகு மரியவத்த வத்திலன்றே" "நறுமலர்மாலைமார்பனரவாகனன்காண்டத்தி,லறுபது மொன்றுமாகுமாகிய துறவுக்காண்ட, மறுபதமைந்துமாகு மன்புவைத்தோதுவோர்க்குந்,திறவதிற்கேட்பவர்க்குஞ் சிவகதியாகு மன்றே" என்னும்பாடல்களானறிக. இந்நூலாசிரியர் பெயர் காலமுதலியன தோன்றவில்லை

உதயணன் — (1) அகஸ்தியன். (2) ஜனமேஜயன் பேரன். சகஸ்திராநீகன்புத்திரன். கௌசாம்பிநகரத்தரசன் இவனை வஞ்சித்துச்சண்டமகாசேனன சிறையிலிட்டபொழுது இவன்மந்திரியால் சண்டமகாசேனன் மகளான வாசவதத்தையுடன் வெளியே உபாயமாகக்கொண்டுவரப்பட்டவன். (3) சதாநீகன்புத்திரன். கௌசாம்பி மனனனுயிருந்து பிறகு புத்தசிஷனுகி அரசுதுறந்து பௌத்த முனியானவன். (4) வத்ஸதேசத்தரசன். [வத்தவனென்பது பொருள்.]

உதயணன்கதை — சிறுகாப்பியங்கள் ஐந்தனுளொன்று.

உதயணன்மந்திரிகள் — யூகி உருமண்ணுவான் வயந்தன் இடபகன் எனு நால்வர் [மணிமே.].

உதயணுசாரியர் — நியாயகுசுமாஞ்சலி யென்னுநூலாசிரியர்.

உதயாசுவன் — அஜாதசத்துருபௌத்திரன். பாடலிபுத்திரமெனும் குசுமபுரத்தை யுண்டுசெய்த மகத தேசராஜன்.

உதாவசு — மிதிலைமன்னனுன ஜனகன புத்திரன்.

உதானன — தசவாயுக்களிலொன்று. இதுநாபயிலிருப்பது.

உதத்மன — (1) மூன்றுமனு (2) உததானபாதன மகன. இவன வேட்டைக்குச்சென்று அநுகோரியக்களுலிறந்தமையால் இவன தாய் சுருசியும் மனந்தாளாது உயிர்துறந்தனள்.

உத்தமௌஜன் — துருபதராஜன்புத்திரன். திஷ்டத் தய்ம்னனுக்கிளைவல். பாரதம்பதினெட்டாம் போரிரவில் அசுவத்தாமனல் நித்திரைக்காலத்திற் கொல்லப்பட்டவன்.

உத்தரகீதை — வேதாந்த விடயங்களைக் கூறுவதும்பாரதத்தொரு கூறுமானநூல் - பகவற்கீதையைக் கேட்ட அர்ச்சுனன மீணடும் ஞானமடையும்படி கண்ணனுல் அருளிச்செய்யப்பட்டது.

உத்தரகுரு — போகபூமியிலொன்று தபோவனம். சூரியனது உடல்வெம்மையாற்றாத அவன் மனைவியும் துவஷ்டாவின் மகளுமான சஞ்ஞிகை அசுவினிதேவரைப் பயந்த விடமிதுவே.

உத்தரகோசமங்கை — சிவபெருமான் மணிவாசகப் பெருமானுக்குக் குருந்தமர நிழலிற் குருமூர்த்தியாயிருந்து அநுக்கிரகித் தாட்கொண்ட சிவஸ்தலம். இதுபாண்டிநாட்டிலுள்ளது.

உத்தரகௌத்தன் — வடரஞ்சிக்கநத்தரசன்.

உத்தரமீமாஞ்சை — வேதாந்தசூத்திரம். ஜைமினிமுனிவரியற்றியது.

உத்தரன் — (1) விராடராஜன்புத்திரன். விராடனது பசுநிரைகவர்ந்த கௌரவரோடு போருக்காற்றாது, பின்னர் அர்ச்சுனனுதவியால் அவரைவென்று பசுநிரையை மீட்டுச்சென்றவன். (2) கனகவிஜயர்க்குத்துணையான ஓரரசன்.

உத்தராதித்தன் — பன்னிரு சூரியருளொருவன் - இவனது பூசையால் அலக்ஷ்மணயென்பாள் முத்தியடைந்தனள் [காசிகண்டம்]

உத்தரை—விராடராஜகுமாரி, உத்தரனுக்கிளையவள். அர்ச்சுனன்பேடிரூபந்தாங்கிப் பிருகந்நளை யென்னும் பெயர்பெற்று அஞ்ஞாதவாசஞ்செய்தபொழுது அவனிடம்நாட்டியங் கற்றவள். அபிமன்னியு மனைவி. பரீக்ஷித்துவின் தாய். இவள் பரீக்ஷித்துவைக் கருப்பமுற்றிருக்கையில் அசுவத்தாமன்விடுத்தபாணம் அக்கருவைச் சிதைக்காமல்கண்ணனாற் காக்கப்பட்டது இதுகாரணமாக அக்குழந்தைக்குப் பரீக்ஷித்தென நாமகரணஞ்செய்யப்பட்டது.

உத்தவர்—ஒருமுனிவர். விதுரனுக்குக்கண்ணன் சரிதையும் ஞானமும் உபதேசித்தவர்.

உத்தவன்—(1) யது வமிசத்துதித்த பிருகஸ்பதியின்சீடன், இவன்பிதா தேவபாகன்-வசுதேவன் இவனுக்குப் பெரியதந்தை. தனது நண்பருண கண்ணன் கட்டளைபெற்று வதரிகாச்சிரமம் [இலந்தைக்காடு] சென்று சந்நியாசம் பூண்டவன் (2) சுருஷன்புத்திரன்.

உத்தாமசூசுமை—பார்வதிதோழியருளொருத்தி [சைவபுராணம்]

உத்தாரகர்— ஒரிருடி. வியாக்கிரபாதர் குமாரர். இவருடைய குருபக்தியை வியந்த அசுவினிதேவர்கள் இவர் குருவாகிய தௌமியரது உலகதந்தத்தினைமாற்றிச் சுவர்ணதந்தமாக்கினார்கள். இவர் மகன் சுவேதகேது. இவரை உபமன்யுவென்று சொல்லுவர். சிவபெருமானால் திருப்பாற்கடலைப் பருகினவர். இவருடையதாய்வசிஷ்டன் தங்கை. கண்ணனுக்குச்சிவதீக்ஷை செய்வித்து அவனைப்பாசுபதவிரதியாக்கியவர்இவரே.

உத்தாலகர்—அருணன்புத்திரர். இருக்வேதத்திற்பிரஸ்தாபிக்கப்பட்டவர்.

உத்தானபாதன் — சுவாயம்புவின் இரண்டாம் புத்திரன். இவன்தாய் சதரூபை. மனைவியர் சுநீதி சுருசியென்னி விருவர். இவனுக்குச்சுநீதியிடம்துருவனும், சுருசியிடம்உத்தமனும் புத்திரராகப் பிறந்தனர்.

உதபிரன்—சிவபெருமானால்ஹரிகேசனுக்குக் கொடுக்கப்பட்ட அடிமைகளி லொருவன்.

உபகாரவர்மா—தசகுமாரநாடகத்திற் கூறப்படும் பதினமருளொருவன்.

உபகு—மிதிலை மன்னருள் சத்தியரதன் புத்திரன் இவன் மகன் உபகுப்தன்.

உபகுப்தன்—உபகுமகன். மிதிலைமன்னருளொருவன்.

உபசுருதி—அசரீரி. ஆகாயவாணி. ஒன்றை ஒருவர் எண்ணுகையில் உண்டாகும் திருவாக்கு.

உபசுருத்யதிதேவதை—வாணி.

உபதானவி—வைசுவானரன் புத்திரி.
இரணியாக்ஷன் மனைவி.

உபதேவி—தேவகன் புத்திரி. கற்
பவிருஷ்டி முதலிய பதின்மரைப்
பெற்றவள்.

உபநந்தன்—யதுவமிசத்து வசுதே
வன்குமாரன். இவன்தாய்மத்திரை.
சகோதரன் நந்தன்.

உபநிடதங்கள் } வேதசிரசாக விள
உபநிஷத்துகள் } ங்கிப் பிரமஞான
த்தைப் போதிக்கும் முடிந்தவிடய
ங்கள். அவை நூற்றெட்டு. அஷ்
டோத்தரசதோபநிஷத்திற்காண்க.

உபபாண்டவர் — தருமனாதி ஐவர்க்
கும் திரௌபதியிடம் பிறந்த ஐந்
தமக்கள். இளம்பஞ்சபாண்டவரெ
ன்றுஞ் சொல்லப்பட்டவர். பாரத
யுத்த முடிவில் இரவில் நித்திரை
செய்து கொண்டிருக்கும் போது
பாண்டவர்களென்று அசுவத்தாம
னாற் கொல்லப்பட்டவர்கள்.

உபமன்யு — உத்தரகிரிற் காண்க.
வியாக்கிரபாத முனிவர்குமாரர்.

உபமன்யு பக்தவிலாசம் - திருத்தொ
ண்டர் புராணசரிதத்தை வடமொ
ழியிற் கூறுமநூல். இது உபமன்யு
ப்ரோக்தம்.

உபயகோமுகி — பசுவானது பிரச
விக்கையில், கன்று தாயினின்றமு
ற்றும் வெளிப்படா திருக்கையிற்
செய்யப்படுந்தானம் - இவ்வாறுசெ
ய்ய இயலாதார் பொன்னாற்செய்து
கொடுத்தலுமுண்டு. [இரண்டு பசு
முகங்களையுடையது ]

உபயாஜன — ஒருவேதியன். கங்கா
தீரத்தில் வானப் பிரஸ்தாச்சிரம
மேற் கொண்டவன். இவன்யாஜ
னுடனிருந்து துருபதன் யாகத்
தைப் பூர்த்திசெய்வித்தவன்.

உபரிசரவசு — சூரியன் அமிசமாக
அயோத்தியிலிருந்த ஓரரசன். இ
வன் வானத்திற் சஞ்சரிக்கும்விமா
னமேறி யுலாவுகையில், வசந்தருது
வால் தனக்கு வெளிப்பட்ட வீரிய
த்தைப் பலாசத் தொன்னையிலே
ற்று, அதனை வீணாக்காது தன்மனை
விக்கனுப்ப வெண்ணுகையில், சே
னமொன்று அவன் கட்டளை பெ
ற்று அதனையேற்று அயோத்திநோ
க்கிச்செல்ல, வழியில் மற்றொரு
சேனம் அது மாமிசமென்று தான்
அபகரிக்கச்சண்டையிட, அத்தொ
ன்னை தவறி யமுனையாற்றில் விழ,
கிரிகை யென்னும் அப்சரஸ்திரீ
பிரமசாபத்தால் மச்சவடிவோடிரு
க்தவள் அதனைப் பானஞ்செய்து
கருக்கொண்டிருந்து வலைஞன்வலை
யிலகப்பட, அவன் அதனைச்சேதி
த்து அதன் வயிற்றில் ஒருபெண்
ணும் ஒரு ஆணுமாகிய இருகுழந்
தைகள் உயிரோடிருப்பக் கண்டு,
கண்டெடுத்த பொருளிற் பாதிமன்
னனுக்குரித்தென்னு நியாயத்தால்
ஆண்குழந்தையை உபரிசரவசுக்கு
க்கொடுத்து நிகழ்ந்த சங்கதியையு
ணர்த்த. தன்வீரியத்தா லுதித்தவ
னென்றுணர்ந்து வளர்த்து மன்ன
னாக்கியவன்.

வலைஞன் அப்பெண் மகவைத்
தன் வமிசத்து முதியோன் பெய
ரால் மார்த்தண்டி யென்றும், அங்
நதியின்பெயர்களுளொன்றாகிய்கா
ளியென்றும், கிரிகையென்பவள்
மச்சவடிவாய்ப் பெற்றமையால்கிரி
ஜாவென்றும் பெயர்வைத்தவளர்

-த்தனன். இவளைசத்தியவதி- பராசரால் வசிட்டனைப் பெற்றவள். இவ்விவரம், சத்தியவதியிற்காண்க.

உபஸ்மிருதிகள்—கண்ணுவர் கபிலர் லோஹிதர் தேவலர்காத்தியாயனர் லோகாக்ஷி புதர் சாதாதபர் அத்திரி பிரசேதர் தக்ஷன் விஷ்ணு விருத்தவிஷ்ணு விருத்தமநு தௌமியர் நாரதர் புலஸ்தியர் உத்தராங்கிரரெனும் பதினெண்மர் தத்தம் பெயராற்செய்தஸ்மிருதிகள்.

உபாலி—புத்த சிஷ்யர் பதின்மருளொருவர்,

உபேந்திரன்—வாமனமூர்த்தி. இந்திரனுக்குப்பிறகுதோன்றியமையின் உபேந்திரனெனும்இப்பெயர்பெற்றனர். கசியபனும் அவன் மனைவி அதிதியும்திருமாலைப் புத்திரராகப் பெறுவான் கருதித் தவங்கிடைத்தமையின், திருமால் அவர்வேண்டுகோளுக்கிணங்கி அங்ஙனமேயுதித்து மாவலியினைவீறடக்கியவர் திரிவிக்கிரமமூர்த்தியும் இவரே

உப்பூரிகிழான—மதுரைஉப்பூரிகிழானெனவும இவர் பெயர்வழங்கும் இவர் புத்திரர் உருத்திரசன்மனார்

உமா, உமை—சிவசத்தி. சிருஷ்டிகாலத்தில் பரிணமித்த பிரணவசொரூபமென நூல்கள் கூறும். தக்ஷன் தன்மகளாக வேணடித்தவஞ்செய்து அங்ஙனமே வலம்புரிவடிவாயிருந்து கண்டெடுத்து தாக்ஷாயணியெனநாமமிட்டனன்.பின்னர் ஹிமோபர்வதராஜன் மகளாகத்தவங்கிடந்து ஓர் தாமரைத்தவிசிற் குழந்தையாயிருக்கக் கண்டெடுத்துத் தன்மனைவி மேனையிடங்கொடுத்து வளர்த்தமையின், பார்வதராஜகுமாரி பார்வதியெனத் தத்திதாந்த நாமம்வழங்கும். விச்சுவாவசு வென்னும் விச்சாதரன் குமாரியாய் மதுரைப்பதியிலொரா ண்டு உமையைநோக்கி உணவாதிகளைவெறுத்துக் கடுந்தவம்புரிய, தேவி இளமபருவப் பெண்குழந்தையாய்க் காக்ஷியளித்துநிற்ப,இவ்வுருவுடனென்மடியிலிருத்தியென யாசிக்க, தேவி உனது மறுபிறப்பில்மலயத்துவஜ பாண்டியன் மனைவியாய்க் காஞ்சனமாலையென்னும் பெயருடனுதிப்பை. அப்பொழுது அங்ஙனம் வருவென்றனுக்கிரகித்து, அவ்வரசனுன மலயத்துவஜன் யாகத்தில் மும்முலைப்பெண்ணுகித் தடாதகையென விளங்கினள் [இது திருவிளையாடற்புராணத்திற்பிரசித்தம்.] அன்றியும் வலைஞர் மகளாகவும் பிறகைகையாகவும் விளங்கியசரிதைகள் எண்ணிறந்தனவுள.

உமாசமேதன்—சிவபெருமான்.

உமாபதி—சிவன்.

உமாபதிசிவாசாரியார்—தில்லைவாழ்ந்தணரில்ஒருவர். இவர்கொற்றவன்குடியில் வாழ்க்கையுடையார். சந்தானசாரியரி லொருவர். இவருக்கு ஞானாசிரியர் மறைஞானசம்பந்த சிவாசாரியர். பெற்றான்சாம்பானுக்கு இறைவர் கொடுத்தனுப்பிய "அடியார்க்கெளியன் சிற்றம்பலவன்கொற்றங், குடியார்க்கெழுதிய கைச்சீட்டு - படியின்மிசை, பெற்றான் சாம்பானுக்குப் பேதமறத் தீக்கைசெய்து முத்திகொடுக்க முறை"— என்னுந்திருமுகத்தைக்கண்டு முத்திகொடுத்

தவரும், அதைக் கேள்வியுற்ற அவன் மனைவியும் அரசனும் காண அத்திருமடத்தில், நெடுநாளாகப் பூஜாநிர்மாலிய ஜலத்தைப் பருகி வந்ததோர் முள்ளிச்செடியையும் முத்திக்கனுப்பியவரும், சிவப்பிரகாசம் - திருவருட்பயன்-வினாவெண்பா-போற்றிப்பஃறொடை-கொடிக்கவி - நெஞ்சுவிடுதூது உண்மைநெறிவிளக்கம் - சங்கற்ப நிராகரணம் - கோயிற்புராணம் திருமுறைகண்டபுராணம்- சேக்கிழார் புராணமுதலியன இயற்றியவரும் இவரே.

உமாபதீசர்—திருஊறலிலே . சிவபெருமானுக்கு வழங்குந் திருநாமம்

உமாமகேச்சுரமூர்த்தி— சிவமூர்த்தங்கள் அறுபத்துநான்கனுளொன்று; சிவசத்தி யாகிய உமாதேவியே இறைவன் திருக்குறிப்பின் வண்ணம் பஞ்சகிருத்தியமியற்றி அக்கினிக்குஷ்ணம்போல, அபிந்நாபாவமாயிருத்தலின், அக்கருணையுருவே ஆதிசத்தி இச்சாசத்தி கிரியாசத்தி ஞானசத்தி பராசத்தியென ஐவகைப்படும். இப்பஞ்சசத்திகளின் தசாம்சபேதத்தால் சகளநிஷ்களமாகிய சதாசிவரூபமாம். கிரியாசத்தியினால் சதாசிவத்தில் சகஸ்ராம்ஸமாக அநந்தேசுவரரூபமாய் இருபத்தைந்து விக்கிரகபேதமாகிக் கிருத்திய பேதத்தைச் செய்யும் அவ்வுமையோடுகூடிய அழகனே உமாமகேசுவரமூர்த்தியெனப்படுவன்.

உமாமகேச்சுரர்—திருவல்லத்திற்சிவபெருமானுக்குவழங்குந்திருநாமம்

உமேசமூர்த்தி--சிவமூர்த்தங்கள் அறுபத்துநான்கனுளொன்று. ஒரு பதுமகற்பத்தில பிரமன் சனகாதி நால்வரை புதல்வரைப்பெற்று, அவர்களைக்கொண்டு சிருஷ்டி நிறைவேறாமையின் வருந்தித் திருமாலுடன்குறை கூறியிரப்ப, அவர் பிரமனையும் குமரரையுங் கூட்டிக்கொண்டுகைலாயபதியையடைந்து விண்ணப்பிக்க, அவர்களை நெறறிவிழியால் நீறுசெய்து,இடத்தோளைபபார்க்கஆங்கிருநது உமாதேவி தோனற அவருடன ஒருதிருவிளையாடலைச்செய்து, பண்டுபோல அறுவரையுமெழுப்பி, சிருஷ்டி கைகூடச்செய்தனுப்பிய சிவமூர்த்தி இககருத்து "ஆகமங்க ளெங்கே யறுசமயங் தாமெங்கே, போகங்களெங்கேபுணர்ப்பெங்கே— பாகத், தருள் வடிவுந் தானுமா யாண்டிலனேலந்தப், பெருவடிவை யாரறிவார் பேசு" எனனும் வெண்பாவினுங் விளங்குதல் காண்க.

உமை— பார்வதி

உமையம்மை— (1) திரு அஞ்சைக்களம் (2) திருஆறல் இத்தஸ்தலங்களில் பார்வதி தேவிக்கு வழங்குந் திருநாமம்.

உய்யக்கொண்டார்வளநாடு—அரைசிலிக்கும் காவிரிக்கும் நடுவிலுள்ள நாட்டின் பூர்வகாலநாமம்.

உய்யவந்ததேவநாயனார்— (1) திருவியலூரினர். திருவுந்தியாரெனுஞ்சித்தாந்த நூலாசிரியர். (2) திருக்கடவூரினர். திருக்களிற்றுப்படியாரெனுஞ் சித்தாந்த நூலாசிரியர். திருவுந்தியா ரியற்றிய உய்யவந்த நாயனருக்கு மாணாக்கர். இவரை யாட்கொண்டாரென்றும், அந்நூல்

நடராஜ பதியால் அங்கீகரிக்கப்பட்டதென்றும் கூறுப. இவ்விடயம் "வாட்கையச வாணிபன்செய் மாநூ வினைப்படிக்கற்-பூட்கை யெடுக்கக்கொள் புலியூரே" என்பதனுலுணரப்படும்.

உரகர்—பதினெண்கணங்களிலொரு சாரார்.

உருசிரவன்—சத்தியசுவன் மகன்.

உருத்திரசன்மஞர்—மதுரை உப்பூரிகிழான் புத்திரர். இவரைக்குமாரக்கடவுளின் அவதாரமாக நூல்கள் கூறும். இறையனரகப்பொருளுக்குரையிட்ட நாற்பத்தொன்பதின் மருரையையும் கேட்டு அவற்றுள் மதுரைக் கணக்காயனர்மகனர் நக்கீரனுருரையை மெச்சியவர். இவரே அகநானூறுதொகுத்தவர். இவர் மூங்கைப்பிள்ளையாயிருந்தவர்.

உருத்திரதத்தன்—சசந்தராசன்மந்திரி [சீவகசிந்தாமணி]

உருத்திரப்சுபதிநாயனர்—அறுபான்மும்மை நாயனமார்களுளொருவர். தலையூரிலேஜனித்தவர். அல்லும் பகலும் சிவசிந்தனையோடு தடாகத்திலிருந்து உருத்திர பாராயணத்துடன் தியானஜபஞ்செய்து சிவபிரானாது திருவடியையடைந்தவர்.

உருத்திரன்—(1) சிவன (2) ஸ்ரீகண்டபரமேசுவரர் (3) பிரளயகாலருத்திரதேவர் (4) ஏகாதசருத்திரரிலொருவர் (5) அண்டாணடங்களின் நாற்புறத்திலும் மேல்கீழ்முதலிய விடங்களிலுமுள்ள கோடாகோடியுருத்திரர் (6) கனகவிஜயனுக்குநண்பனை ஓரரசன் [சூளா] (7) ஆரிய அரசரிலொருவன் [மணி]

உருப்பசி—(1) ஊர்வசியெனும்பாலுக்குராமரந்தரம். அப்பெயரிற்காண்க (2) தேவகணிகையரிலொருத்தி. அகத்தியமுனிவர் சாபத்தால் மானிடப்பெண்ணுய்த் தோன்றி மாதவியெனப் பெயரெய்தியவள் [சிலப்]

உருமிளை—தென்றிசைப்பாலகனுனயமன்மனைவி.

உருவற்சன்—யதுவமிசத்துதித்த வசுதேவன்புத்திரன். இவன்தாய் இளை

உரையாசிரியர்—இளம்பூரணர் சேனவரையா நச்சினர்க்கினியர் பரிமேலழகர் அன்றியும் பேராசிரியர் முதலியோருமாம்

உலகநாயகி—திருநின்றியூரில் தேவியாருக்கு வழங்கும்திருநாமம்.

உலகவறவி—ஊரம்பலம். காவிரிப்பூமபட்டினத்துச்சக்கரவாளகோட்டத்திலுள்ளசம்பாபதி கோயிலின்முன்புள்ளது. பலருக்குந்தங்குதற்குரியதருமசாலை. இதுபோன்றதை [லோகோபகனிகம] என்பர் வடநூலார். கந்திற்பாவையுள்ள 'இடமிதுவே மணிமேகலை செல்லுந் தோறும் இதனை வலஞ்செய்து தொழுதே இதிலேறினள்.

உலும்பினிவனம்—கோசலதேசத்திற் கபிலவஸ்துவிற் சாக்கிய சக்கரவர்த்தியாகியசுத்தோதனனுடைய பட்டமகிஷியாண மாயாதேவியின் வயிற்றிலிருந்து அவள் வலமருங்குல்வழியே கௌதமபுத்தர் அவதரித்த இடம். இஃதிக்காலத்து லம்பினி என வழங்குகிறது [மணி]

உலூகன்—(1) இந்திரன் (2) சகுனிமகன். சகாதேவனுற் கொல்லப்பட்டவன். கௌரவரால் பாண்டவரிடந்தூது சென்றவருளொருவன்.

உலூபி—வாசுகிமகள். நாககன்னிகை

இவனே அர்ச்சுனனைக்கூடி இலாவந்தனைப் பெற்றவள்.

உலோகபாலன்—(1) சீவகனாசிரியன் அச்சணந்தியிற்காண்க (2) பதுமை சகோதரன் [சீவகசிந்]

உலோகாயதன்— ஒரு சமயவாதி. இவன் ஈசன் கன்மம் ஆன்மா இவையில்லை யென்றும், மாதரின்பமே பொருளென்றும் கூறுவோன்.

உலோச்சனார்— அகநானூறு பாடிய புலவரு ளொருவர். இராஜசூயம் வேட்ட பெருநற் கிள்ளியெனுஞ் சோழனைப் பாடியவர்.

உலோபாமுத்திரை—புலஸ்தியர் தங்கையென்றும் விதர்ப்பராசன்யாகத்தில் அவனுக்குக் குமாரியாகத் தோன்றியவ ரென்றுஞ் சொல்லப்பட்டவர். அகத்தியர் மனைவி. இவரை அபேக்ஷித்த இராவணன் பலதுன்பங்களை யடைந்தனன்.

உலோமபாதன்— அங்கநாட்டரசன். தன் நாட்டில் மழையில்லாதகாலத்தில், ருஷிய சிருங்கர்வரின் மழை பெய்யுமெனப் பலருஞ் சொல்லியபடி, அம்முனிவரை வருவித்து மழை பெய்யப்பெற்றபின் அவருக்கு தன்குமாரத்தியை மணம்புரிவித்தவன் [சைவபு]

உவவனம்— காவிரிப்பூம் பட்டினத்தைச் சார்ந்த ஒரு பூஞ்சோலை. புத்தபாத பீடிகையுடைய ஒரு பளிக்கறையை யுடையது. மணிமேகலை பூப்பறிக்கச்சென்ற ளென்பதுணர்ந்த உதயகுமாரன் அவளை யுடன்கொண்டு செல்ல முதலில் வந்து முயன்ற விடமிதுவே. மணிமேகலாதெய்வம் அவளுக்குக் காட்சியளித்து அவளை மணிபல்லவத்திற்குக் கொண்டு சென்றவிடமும் இதுவே

உழாநாஞ்சில்—நாஞ்சின் மலையிற் காண்க.

உள்ளங்கைக்கொணர்ந்த நயினார் — இவர் கமலநயன பட்டரின குமாரர்; இவர் யாதவப் பிரகாசருடைய சூழ்ச்சியால் உடையவரிடமிருந்து பிரிக்கப்பட்டுக் கங்காஸ்நானமாடி, அங்குத் தெய்வீகமாகத்தங் கரமடைந்த இலிங்கத்தால் உள்ளங்கைக்கொணர்ந்த நயினாரெனப் பெயரடைந்தவர். பின்பு அவ்விலிங்கத்தைக்காளத்தியில்பிரதிஷ்டை செய்து சைவாசாரம் பூண்டொழுகுகையில் திருமலை நம்பியால் வைஷ்ணவராய் எம்பாரென நாமம் பூண்டவர். கோவிந்தப்பட்டரென்பது இவரது பிள்ளைத்திருநாமம்.

உள்ளமுடையான்—பழமையான ஒரு சிறந்த ஜோதிடத் தமிழ் நூல்.

உறந்தை—உறையூர். சோழருடைய இராஜதானிகளி லொன்று.

உறையூரேணிச்சேரி—உறையூருக்கடுத்த ஒரு சிற்றூர்.

உறையூரேணிச்சேரிமுடமோசியார்-- இவர் அந்தணர். சோழன் முடித்தலைக் கோப்பெருநற்கிள்ளி - ஆய் எனும் வள்ளல் இவர்களைப் பாடிய புலவர். ஆய் இறந்த பின்னுமிருந்தவர். இவர்பெயர் மோசியென்றும் வழங்கும். [புறநா]

உறையூர்— உறந்தை. சோழருடைய இராஜதானிகளிலொன்று.

உறையூர்நீசுளாபுரி—காவிரியின்தென்கரையிலுள்ள ஒரு விஷ்ணுஸ்தலம்.

உறையூர்மருத்துவன்தாமோதரனார்-- சோழன் * குராப்பள்ளித் துஞ்சிய

பெருந்திருமாவளவனையும் பிட்ட
ங்கொற்றனையும்பாடியவர்[புறநா]

உறையூர்முதுகண்ணன்சாத்தனார்— சோழன் நலங்கிள்ளியைப்பாடிய ஒருபுலவர் [புறநா]

உறையூர்முதுகூத்தனார்—கடைச்சங்கத்துப் புலவர் திருவள்ளுவமாலை பாடியவருளொருவர்.

உற்கஜம்-ஒருபுண்ணியதீர்த்தம். இங்குத்தான் பாண்டவர்தௌமியரைப் புரோகிதராகக்கொண்டது.

உர்கலய—ஒட்டிரதேசம் பஞ்சகௌடங்களிலொன்று.

உத்கலன் — துருவன்மகன் தன்தந்தைதுருவனைபபோலவே இளமைப்பருவத்தே துறவியானவன. இவன் தம்பிவற்சரன்.

உற்கன்—சயன்புத்திரன்.

உற்பலாக்ஷிபீடம் — சத்திபீடஙகள் அறுபத்துநான்கனுளொன்று. இது சுவர்ணாக்ஷத்திலுள்ளது

உற்பலாவதி— நிர்விருதருஷி சாபத்தால் மிருகமாகிச் சுராஷ்டிரன்பரிசத்தால் கருப்பமாயத் தாமசமனுவைப் பெற்றவள். ...ன் மகள்.

உன்மத்தன்—இராக்கதன. மாலியவா

உன்முகன்— சக்ஷுர்மனு புத்திரன். தாய் நடுவலை. மனைவி புஷ்கரிணி. அங்கன் சுமனசன் கியாதி கிருது சயன் அங்கிரசன் இவர்களபிதா.

உஷாநாயகன், உஷாபதி } அநிருத்தனிற்காண்க

உஷை—(1) வாணாசுரன் மகள. அநிருத்தன்பாரி. (2) சூரியன்பாரி.

## ஊ

ஊகூ — ஒருவித்தியாதரன். இவன் ஜலத்தினுள் மறைந்துகொண்டு, நீராடுமொரு முனிவர்காலைப்பற்றி யீர்க்க, அவரால் முதலையாகுகவெனச் சபிக்கப் பட்டு அங்ஙனமே கஜேந்திரன் காலைப்பற்றி யீர்த்து நெடுங்காலம் போர்புரிந்து திருமாலின் சக்கராயுதத்தாற் சங்கரிக்கப் பட்டுச் சாபநீங்கிப் பண்டையவடிவேற்று முத்தியடைந்தவன்.

ஊங்கனூர் — சேரநாட்டின் கடற்கரையிலுள்ள ஒரூர். இதனருகே கடலில் வஞ்சனையாக மூளைத்த கடப்பமரமொன்றைச் சேரன்வெட்டினன் [சிலப்]

ஊசிகன் — யதுமரபினன். கிருதிமைந்தன்.

ஊர்ச்சஸ்வதி — பிரியவிரதன் மகள். தேவயானை யென்றும் பெயர்பெற்றவள். சுக்கிரன் மகள்.

ஊர்ச்சிதன் — யதுமரபினன். கார்த்தவீரியார்ச்சுனனன் மகன். [ந்ததி

ஊர்ச்சை — வசிஷ்டர் மனைவி. அரு

ஊர்த்ததாணடவேசர் — திருஆலங்காட்டில் சிவபிரானுக்கு வழங்குந் திருநாமம்.

ஊர்மிளை — ஜனகராஜன் தத்தபுத்திரி. இலக்ஷ்மணன்மனைவி இவள் தன் கணவன் இராமனோடு வனவாசஞ்செய்து திருமபிவரு மெல்லையும் நித்திரையி லிருந்த தாகவும், இலக்ஷ்மணன் நித்திரையின்றியிருந்ததாகவும கூறுவர்.

ஊர்வசன் — சுசிபுத்திரன்.

ஊர்வசி — ஒரப்சரசு. நரநாராயணர் தொடையி லுதித்தமையின் இப்பெயரேற்றவள்.[ஊரு=தொடை]

ஊர்வன் — உக்கிரமானதவத்தி லிருக்கையில், நாரதாதி தேவருஷிகளும் பிரமருஷிகளும் ஒருபுத்திர

னையுண்டு செய்க வென, இவன் ஒரு நாணற்கூர்ச்சத்தைக் கையிற் கொண்டு தன்தொடையை அக்கினியில் வைத்துமதிக்க, அதிலிருந்து சுவாலாமாலி யெனும் புத்திரன் பிறக்க, பிரமன் பிரார்த்தனையால் இவன் அப்புத்திரனைச் சமுத்திரத்திலுள்ள வடவாமுகாக்கினியில் வசிக்கவும் அந்நீரையே ஆகாரமாகப் புசிக்கவும் வரமளித்தனுப்பியவன். அம்மகனுக்கு ஔர்வனென்றும்பெயர்.

ஊன்பொதி பசுங்குடையார் — சோழன் நெய்தலங்கானல் இளஞ்சேட்சென்னியையும், சோழன் செருப்பாழியெறிந்த இளஞ்சேட் சென்னியையும் பாடிய ஒரு புலவர். இவர்மாமிசத்தைக்குடையில்மறைத்துச் சென்றமையின இப்பெயரேற்றவர் [புறநா.]

## எ

எங்களாழ்வான் — வைணவசிங்காசனாதிபதிகள் எழுபத்து நால்வருளொருவர்.

எச்சதத்தன் — விசாரசருமருக்குப் பிதா. மண்ணியாற்றங் கரையில் விசாரசருமர் சிவபூஜை செய்து கொண்டிருக்கையில பாற்குடத்தைக் காலாலிடறி, விசாரசருமரால் காலைவெட்டப் பெற்றவன். தண்டிசரிற்காண்க.

எட்டாம்பத்து — எட்டுத்தொகையுளொன்றாகிய பதிற்றுப்பத்திலெட்டாவது. தகடூரெறிந்தபெருஞ்சேரலிரும்பொறையை அரிசில் கிழார் பாடி, ஒன்பது நூறாயிரம் பொற்காசு பரிசில்பெற்றது.

எட்டிகுமரன் — காவிரிப்பூம் பட்டினத்துள்ள ஒருவணிகன். சுந்திற் பாவையில் அதிட்டித் திருக்கும் துவதிகனென்னுந் தெய்வத்தின் நண்பன். [மணி.]

எட்டுத்தொகை — ஒவ்வொன்றும் கடைச்சங்கப் புலவர்கள் பலரால் செய்யப்பட்டு, தொழில் அளவு பாட்டு பொருளென்பவற்று ளொவ்வொன்றால் தொகுக்கப்பட்டமையின தொகையெனப்பட்டது. இதனை, "நற்றிணை நல்ல குறுந்தொகை யைங்குறுநூறு, ஒத்த பதிற்றுப்பத் தோங்கு பரிபாடல், கற்றறிந்தார் சொல்லுங் கலியோ டகம்புறமென், றித்திறத்த வெட்டுத் தொகை" என்னும் வெண்பாவாலறிக. இவற்றைப்பற்றித் தத்தம் சிறப்பு வரிகளிற்காண்க.

எதிர்கொள்பாடி — காவிரியின் வடகரையில் சோழநாட்டிலுள்ள சிவஸ்தலம். [யிடம்பிறந்தவன்.

எது — யது, யயாதிக்குத்தேவயானை

எம்பார் — வைணவசிங்காசனாதிபதிகள் எழுபத்து நால்வருளொருவர்.

எயில் — பாண்டிநாட்டிலுள்ள ஒரூர்.

எருக்காட்டூர்த் தாயங்கண்ணனார் — சோழன் குளமுற்றத்துத்துஞ்சிய கிள்ளிவளவனைப்பாடியஒருபுலவ.

எருமைவெளியனார் — புறநானூறு பாடிய புலவருளொருவர்.

எல்லப்ப நாவலர் — செந்தமிழ் நாவலரென ஆதிகாலத்தில் வெளிப்போந்தவர் இவரே. இவருக்குத்திவ்ய கவியெனவுஞ்சிறப்புப்பட்டம் வழங்கும். இவர் பிரசித்தி பெற்ற அருணாசலபுராணம் அருணைக்கலம்பகம் தீர்த்தகிரிபுராணம் திருவெ

ண்காட்டுப்புராணம், செவ்வந்திப் புராணம் அந்தாதிகள் முதலியபல நூல்களை யியற்றியவர். இவருந்திவ்வியகவி பிள்ளைப்பெருமாளையங்காரெனும் மணவாளதாசரும் ஒன்றாகக் கல்விபயின்றதாகவும் கேள்வி.

எல்லன் — ஒருபிரபு. தொண்டைநாட்டுக் குன்றத்தூரினன். தமிழ் கற்றோர்க்குப் பெருநிதியளித்தகொடையாளி. தனக்கன்புள்ள பாணனொருவன் இறந்தபொழுது அவனுடலைச் சுமக்கப்புகுந்து தொண்டைமண்டல சதகத்திற் புகழ்ந்து பாடப்பெற்றவன்.

எழினி — கேரளதேசத்தரசன். இப்பெயர் யவனிகா என வடமொழியில் வழங்கும். அதிகன் அதியமானிற்காண்க.

எழினிஅதியமான் — கடையெழுவள்ளலிலொருவன். குதிரை மலையையுடைய ஒரு சிறு நாட்டிற்கதிபன். சித்திரனாராற் பாடப்பெற்றவன்.

எழுத்தறிந்த நாதர் — திருஇன்னம்பரில் சிவபெருமானுக்கு வழங்குந் திருநாமம்.

எழுத்தறியும் பெருமான் — மாந்தாவென்னுமரசன் மிக்க தருமங்களை நடத்திவந்து மூப்புற்று மரணமின்றி வருந்தி, சிலர் போதனையால் தர்மங்களைக் குறைக்கக் கருதி கணிகரையழைத்துக்குறைத்தெழுதுகவெனக் கட்டளையிட்டு அதனைத்தான் பார்வையிடுகையில், திருவொற்றியூர் நீங்கலாகவென எழுதப்பட்டிருப்ப, அதனைக்கிறுக்கிவிட்டு மீண்டும்பார்த்தபொழுது அங்ஙனமே யிருந்தமையின் திருவொற்றியூ ரிறைவனார்க்கு இப்பெயர் வழங்குவதொன்றாம்.

எழுப்பெழுபது — ஒட்டக்கூத்தப்புலவரியற்றியது. இது காறுங் காணப்படவில்லை. இதன் விவரம் ஈட்டி யெழுபதிற்காண்க

எறிச்சலூர் மலாடனார் — திருவள்ளுவமாலை சொல்லிய கடைச்சங்கப் புலவருளொருவர்.

எறிபத்தநாயனார் — அறுபான் மூம்மைநாயன்மாருளொருவர். கருவூரினர். சிவகாமியாண்டா ரென்பார் சிவார்ச்சனைக்குக்கொண்டு சென்ற மலர்மாலையின் குடலையை, புகழ்ச்சோழ நாயனாருடைய யானையானது பறித்துச் சிதைப்பக் கண்டு தமதுதிருக்கரத்திருந்தவாட்படையால் அதனை வால்முதலிய விடங்களிற் சிதைத்ததுகண்ட புகழ்ச்சோழர் தமதுவாளைக் கொடுத்து யானையபராதி என் ஊட்டியை யரிகவென, நாயனார்தமதூட்டியை யரிய எத்தனித்துத் திருவருள் பெற்றனர்.

## ஏ

ஏகசக்கரபுரம் — ஒரு அக்கிரகாரம். அரக்குமாளிகையினின்று தப்பிய பாண்டவருங் குந்தியும் அந்தணவேடந்தாங்கிச் சென்று சேர்ந்தவிடம். பகாசுரனைக்கொன்ற இடமுமிதுவே.

ஏகசக்கரன் — தநுபுத்திரரி லொருவன்.

ஏகதந்தன் — கணபதி. {ஒற்றைக்கொம்பன்}

ஏகதன் — பிரமனது மானச புத்திரரிலொருவன்.

ஏகபாதமூர்த்தி — சிருட்டிவினாசம் பத்தில் பிரமவிஷ்ணுருத்திரருரிய

சந்திராதியவரை முறையே வலப்ப
க்கம் இடப்பக்கம் இதயம் வலக்
கண் இடக்கண் முதலிய இடங்க
ளினின்று தோற்றுவித்து, சங்கார
த்தில் அவ்வவரை அவ்வவ்விடங்க
ளிலொடுக்கிக் கொள்ளுஞ்சிவமூர்
த்தி. இது அஷ்டாஷ்டவிக்கிரகலீ
லையுளொன்று.

ஏகபாதன் — அஷ்டவக்கிரன் புத்தி
ரன்.

ஏகபிங்களன் — குபேரன்.

ஏகம்பவாணன்—ஒருவேளாண்பிரபு.
இவரூர் ஆற்றூர். கம்பரிடத்தில்
வித்தியாப் பியாசஞ் செய்தவர்.
தமிழ்நாட்டு மூவேந்தரையுநட்பு
கொண்டவர். புலவர்கட்குப்பெரு
ங்கொடையாளி. தொண்டைமண்
டல சதகத்திற் புகழ்ந்து பாடப்
பெற்றவர்.

ஏகலன்—தேவசிரவசவன் புத்திரன்.
வசுதேவனுக்கிளவல்.

ஏகலவன் / ஏகலைவன் } ஒருவேடன். வில்வித்தை
கற்பிக்கும்படி துரோ
ணாசாரியரைக்கேட்க, அவர் இழி
குலத்தின னெனத் தடுத்துவிட,
இவன் அவரைப்போன்ற ஒருபிர
திமை செய்வித்து அதனிடத்தன்பு
செலுத்தி வில்வித்தையிற் றேர்ச்
சிபெற்றவன். அர்ச்சுனன்வேட்டை
க்குச் சென்றபொழுது அவனுக்
கும் இவனுக்கும் பேச்சுண்டாகிப்
போர் சமமாகப் புரிந்தமையின்,
உன் குருயார் எனவினவ, துரோ
ணரென அர்ச்சுனன் அங்கிருந்து
துரோணரிடம் வந்துதெரிவிக்க,
துரோணர் அவனைக் குருகாணிக்
கையாக வலக்கைப் பெருவிரலைக்
கேட்க அதனை அறுத்துத்தந்தவன்.
இவன் பாரத யுத்தத்தின் முன்
கண்ணனாற் கொல்லப்பட்டவன்.

ஏகாக்ஷி — குபேரன்.

ஏகாந்தராமையர் — பூலோகருத்திர
ரென யாவராலு மதிக்கப்பட்டோரா
டோறல் கைலாயஞ் சென்று தரி
சித்துவந்த ஒரு வீரசைவர்.

ஏகாம்பரநாதர் — காஞ்சியிலே சிவ
பெருமானுக்குவழங்குந் திருநாமம்.

ஏகாம்பரபீடம்— சத்திபீடங்கள் அறு
பத்து நான்கனு ளொன்று. இது
வேதாரணியத்திலுள்ளது.

ஏமசந்திரன் — அபிதானசிந்தாமணி
யெனும் ஜைனசித்தாந்த நிகண்டு
செய்தவன்.

ஏமநாதன் — பாணபத்திரரை யாழி
ல் வெல்ல வந்து இரவிலேயே
தனதுநகரிற் கோடியஒருபாணன்.

ஏமமாபுரம் — தடமித்தன் நகரம்.

ஏமாங்கதம் — சீவகனுடையநாடு

ஏமாங்கதன்— சித்திரகூடராசகுமா
ரன் [சூளா]

ஏயர்கோன் கலிக்காம நாயனார் —
அறுபான் மும்மை நாயன் மாரு
ளொருவர். திருப்பெரு மங்கலத்
தில் வேளாண் குலத்திலுதித்தவர்.
மகாசிவபத்தர் - சூலைநோயால்வரு
ந்துகையில் சிவபிரான். இவரது
கனவிலெழுந்தருளி, சுந்தர மூர்
த்தி சுவாமிகள வரில் இந்நோய்
தவிருமெனத் திருவாய்மலர்ந்தரு
ளினர். சுந்தரமூர்த்தி சுவாமிகள்
பரமசிவனைப் பரவையார் வீட்டி
ற்குத் தூதனுப்பியவ ராதலின்
அவர் சிவாபராதியெனக் கருதிஅவ
ரால் நோய்தணிவதினும் இறத்த
லே நலமென்றுதமது உடைவா
ளால் வயிற்றைப் பீறிக்கொள்ள,
சிவபெருமான் அநுக்கிரகித்தருளி

ரீத்து சூலைதவிர்த்தருளினர். பின்னர் சுந்தரமூர்த்தி சுவாமிகளுடன் மிக்க நண்புற்றிருந்தவர். இவர் மனைவியார்மானக்கஞ்சாற நாயனார் புத்திரியார். [பஞ்ச வடிக்காகக் கூந்தலைத் தந்தையால் மணவினைக்குமுன்னர் அரிந்து கொடுக்கப் பெற்றவர்)

ஏரண்டமுனிவன்—கொட்டையூரில் வசித்திருந்தவர். ஒரு காலத்தில் காவிரிப்புனல் வலஞ்சுழிப் பிலத்துள் புகுவதாய் தேசம்க்ஷாமமடைந்தமையைச் சோழராசன்சொல்லி முறையிட, ஒருமுனிவனாவது மன்னனாவது அதில் வீழ்ந்திறப்பின், அது அடைபட்டு நீர் நிலமிசைப் படருமென அரசன்தானே அங்ஙனமிறந்து பிரஜைகட்குச் சுகமுண்டுசெய்வது நலமென்று அரசுரிமையை மகனுக்களிப்ப, அதையுணர்ந்த அவன் மனைவி அம்முனிவனிடஞ்சென்று பணிய, முனிவன் நீ தீர்க்கசுமங்கலியாயிரு என்றாசீர்வதிப்ப, அம்மங்கை தன்கணவன்நியமனத்தையுணர்த்தி, 'தேவரீர் செய்த ஆசீர்வாதம் பழுதுபடாமற் காக்கவேண்டும்' எனவேண்ட, தான் அரசனிடஞ் சொல்லியதை நினைந்து, அவனிடஞ்சென்று அவனையிறவாமற்றடுத்து, தானே யங்ஙனஞ் செய்வதாகவும், தனக்காக நான்கு சிவாலயப்பிரதிட்டை செய்யவேண்டுமென்றுங் கூறி, வலஞ்சுழியில் வீழ்ந்திறந்து, நீரைப்பிலத்திற் புகவொட்டாது தடுத்தபுண்ணியன். இவர் காரணமாகவே தஞ்சைராஜராஜேச்சுரம்-கங்கைகொண்ட சோளேச்சரமுதலியன பிரதிட்டை செய்யப்பட்டன.

ஏழுபது— கம்பர் வேளாண்மரபினரையும் அவர்கட்குரியஉழவுகருவிகளையும் சிறப்பித்துக்கூறியஎழுபது செய்யுட்களாலாகிய ஒருஜாதிநூல், திருக்கைவழக்கமும் இத்தகையதே.

ஏலவார் குழலியம்மை — திருஇரும்பூளையில் உமாதேவி யாருக்குரிய திருநாமம்

ஏலாதி — சங்கமருவிய பதினெண் கீழ்க் கணக்கினுளொன்று,எழுபது செய்யுட்களால் கணிமேதாவியரியற்றியது.]

ஏழாம்பத்து—எட்டுத்தொகையுளொன்றான பதிற்றுப்பத்தில்ஏழாவது. செல்வக்கடுங்கோ வாழியாதனென்னுஞ் சேரனைக்கபிலர்பாடியது. இதற்காக நூறாயிரம் பொற்காசும் ஒருபெரியமலை மீதேறிக் கண்ட நாடும் பரிசில் தரப்பட்டது.

ஏழிலைம்பாலை—ஒவ்வொருகாம்பிலும் எவ்வேழிலைகளையுடைய ஒருமரம். இதனை ஸப்தபர்ணமெனவடநூலார் கூறுவர். இதன்மலர்மணம் யானைமதநீர்போலும் நாற்றத்திற்குவமை கூறப்படும்.

ஏறைக்கோன்— காந்தட்பூ மாலையணிந்த குறவர்தலைவன். மலைநாட்டு மன்னவன். இவனைப்பாடியவர் குறமகள் இளவெயினி.

ஏனாதி—அபிமானிக்கப்பட்ட பிரபுக்களுக்கு அரசரால் கொடுத்துவந்த ஒருபட்டப்பெயர்.

ஏனாதிதிருக்கிள்ளி—கொடையும் வீரமுமுடைய ஒருபிரபு, இவனைப் பாடியபுலவர்கோனாட்டு எறிச்சிலூர் மாடலன் மதுரைக்குமரனார்.

ஏனாதிநாதநாயனார்— ஈழக்குலச்சான்றோர் மரபிலே எயினனூரிலேஜனித்தவர், அறுபான்மும்மை நாயன்மாருளொருவர். படைத்தொழிற்சாமர்த்தியமுடையராய் அரசனால் மதிக்கப்பெற்றவரும் ஏனாதிபட்டம் வகித்தவரும், திருவெண்ணீறு உருத்திராக்கமணிந்தோரிடத்தும் பக்தியுடையவருமாயிருந்தவர். இவரோடு வாட்போர் புரிந்து பலமுறையுந் தோல்வியுற்றோடிய அதிசூரனென்போன் இவரைமுடிக்கக்கருதி உதயகாலத்தில் நெற்றியில் திருவெண்ணீறு பிறங்கத்தரித்து வாளும் பலகையுங் கொண்டு, போருக்கழைப்ப, அவனோடுபோர் செய்து கொண்டிருந்து அவனை வெட்டப்போகையில், அவன் கேடயத்தை முகத்தினின்றகற்ற அவன்நெற்றியில்விபூதியின்விளக்கத்தைக்கண்டு சிவனடிய ரெனவாளாநிற்ப அதிசூரன்தன்காரியத்தைமுடிப்ப, சிவாநுக்கிரகத்தால் முத்தியடைந்தவர்.

## ஐ

ஐங்குறுநூறு— எட்டுத்தொகையுண் மூன்றாவது. அகப்பொருட்பகுதியாகிய ஐந்திணைகளையும் நூறுநூறு அகவற்பாக்களால் விளக்குவது. கடவுள் வாழ்த்து முதல் ஐந்நூற்றொரு அகவற்பாக்களையுடையது இவற்றுள், கடவுள் வாழ்த்து பாரதம்பாடிய பெருந்தேவனாராலும், மருதத்திணையைக் குறித்த முதல் நூறு ஓரம்போகியாராலும், நெய்தற்றிணையைக்குறித்த இரண்டாநூறு அம்மூவனாராலும், குறிஞ்சித்திணையைக்குறித்த மூன்றாநூறு கபிலராலும், பாலைத்திணையைக்குறித்த நான்காநூறு ஓதலாந்தையாராலும், முல்லைத்திணையைக்குறித்தஐந்தாநூறு பேயனாராலுமியற்றப்பட்டன. இதனை "மருதமோ ரம்போகி நெய்தலம் மூவன், கருதுங் குறிஞ்சி கபிலர்—கருதிய, பாலை யோதலாந்தை பன்முல்லை பேயனே, நூலையோ தைங்குறுநூறு."என்னும் வெண்பாவானறிக. இதனைத்தொகுத்தான் புலத்துறைமுற்றிய கூடலூர்க்கிழார். தொகுப்பித்தான் யானைக்கட்சேய்மாந்தரஞ்சேரலிரும்பொறை.

ஐஞ்ஞூற்றுவர்— சச்சந்தனதுஅகப்பரிவாரமகளிர். முதல்வரும் சீவகன்றோழருமாகியவீரர்.

ஐத்திரேயன் — ஜனமேஜயனுக்குப் பட்டாபிஷேக நடத்திவைத்த குரு

ஐந்தவர்— இந்துவென்னும் பெயருற்ற அந்தணன் வரத்தாற் பிறந்து பிரமபதவியடைந்து சிருஷ்டிநடத்தியபதின்மர். இவர்கள் காசியபகோத்திரத்திலுதித்தவர்கள்.

ஐந்தாம்பத்து — எட்டுத்தொகையுளொன்றாகியபதிற்றுப்பத்தில் ஐந்தாவது. கோச்செங்குட்டுவனைப்பரணர்பாடியது. இதற்காக் உம்பற்காட்டுவாரியையும், அவன்மகன் குட்டுவன் சேரலையும் பரிசில் கொடுக்கப்பெற்றது.

ஐந்திணையம்பது } இவையிரண்டும் பதினெண்கீழ்க்கணக்கினுட்சேர்ந்தவை. ஐந்திணைகளைப் பற்றிக் கூறப்பட்டன. இவற்றினுள் முந்தியது மூவாதியராலும், பிந்தியது மாறன்பொறையனாராலு மியற்றப்பட்டன.
ஐந்திணையெழுபது

ஐந்திரம் — (1) இந்திரனாற்செய்யப்பட்டவடமொழிவியாகர்ணம்-இது நவவியாகரணங்களு ளொன்றெனப்படும். (2) சிற்பநூல் முப்பத்திரண்டனுளொன்று.

ஐம்படைத்தாலி — காவலாகக் குழந்தைகட்குக் கழுத்திற்பூட்டுவதோராபரணவிசேடம். திதிக்கடவுளாகிய திருமாலின் பஞ்சாயுதங்கள் போலப் பொன்னாற்செய்யப்படுதலின் இப்பெயரேற்றது.

ஐயடிகள் காடவர்கோனாயனார் — அறுபான்மும்மை நாயனமாருளொருவர். தொண்டைமண்டலத்தில் பல்லவன் மரபிலுதித்த ஓரரசர். அரசச் செல்வந் துன்பந்தருவதென்று அதனை வெறுத்து மகனுக்குமுடிசூட்டிவிட்டுத் தலங்கடோறுந் திருப்பணி திருத்தொண்டு முதலியன செய்து கொண்டிருந்து முத்தியடைந்தவர். பதினோராந் திருமுறையில் இவரியற்றிய க்ஷேத்திர வெண்பாவென்னும் பிரபந்தங்காணப்படும்.

ஐயனாரிதனார் — தமிழிலக்கணப்பகுதி ஐந்தனுள புறப்பொருளிலக்கணஞ்செய்தவர் அது புறப்பொருள் வெண்பாமாலையெனப்படும். தொல்காப்பியப் புறப்பொருளுக்கும், இதற்கும் சிலவேறுபாடுகளுள.

ஐயனார் — அரியரபுத்திரனிற்காண்க.

ஐயாதிச்சிறுவெண்டேரையார் — புறநானூறு பாடியபுலவருளொருவர்.

ஐயூர் முடவனார் — இவரை ஐயூர்கிழாரென்றும், உறையூர் முடவனாரென்றுஞ் சொல்வதுமுண்டு. பாண்டியன் கூடகாரத்துத்துஞ்சிய கிள்ளிவளவனையும், தாமான் தோன்றிக்கோனையும் பாடியபுலவர் [புறநா]

ஐயூர் மூலங்கிழார் — கானப்பேரெயில் கடந்த உக்கிரப் பெருவழுதியைப் பாடியபுலவர் [புறநா]

ஐயை — மாதரிபுத்திரி. கண்ணகியிடத்தன்புடைமையின், தேவந்தியால் கண்ணகிகோயிலைச்சேரநாடுசென்றடைந்தவள் [சிலப்]

ஐராவணம் — இரண்டாயிரங் கொம்புகளோடு கைலாயத்தி லிருக்கும் வெள்ளையானை.

ஐராவதம் — திருப்பாற்கடலி லுதித்த நான்குகொம்புகளுடைய வெள்ளையானை. கிழக்குத் திக்கஜம். இந்திரன்வாகனம். இதன்பிடி அப்பிரமை.

ஐராவதி — இமாசலத்தின் தெற்கேயுதித்து சந்திரபாகையோடு சங்கமமாகும் உபநதி.

ஐராவதேசர் — துருவாச சாபமேற்றக்காட்டானையானஐராவதத்தாற் பிரதிட்டை செய்து மதுரையின் மேற்கே பூசிக்கப் பெற்ற சிவபிரான்.

## ஒ

ஒக்கூர்மாசாத்தனார் }
ஒக்கூர்மாசாத்தியார் } — இவர்கள் புறநானூறுபாடிய இருபுலவர்கள்.

ஒட்டக்கூத்தர் — செங்குந்தமரபிலுதித்த ஒரு சிறந்தபுலவர். குலோத்துங்க சோழன் சமஸ்தான வித்துவான்களிற் றலைமையர். இவர் ஒருகாலத்தில் "ஆடுங்கடைமணி நாவசையாமலகிலமெங்கும், நீடும் புகழைத் தரித்தபிரானிந்த நீணிலத்தில்," என அரசனைச் சிறப்பிக்கையில், அரசன் அதன்பின்னிச

ண்டடியாக "பாடும் புலவர் புக ழொட்டக் கூத்தன் பதாம்புயத் தைச், சூடுங்குலோத்துங்க சோழ னென்றேயெனைச் சொல்லுவரே" என்றுகூறி அக்கட்டளைக் கலித்து றையைமுடித்தமையானே, இவர் குலோத்துங்க சோழனுக்கு வித்தி யாகுரு வாதல்வேண்டு மென்பது ணரத்தக்கது. "கோவையுலா அந் தாதிக்கொட்டக்கூத்தன் **துலா தொருவர் பகரொணாதே" என ஔவையாரால் விசந்து கூறப்பெ ற்றவர். இவர் கம்பர் புகழேந்திப் புலவர் ஔவைமுதலிய சிலவித்து வான்களோடு எதிர்த்துப் பகைத்த வரெனச் சரிதங்களுள. விரிப்பிற் பெருகும்.

இவர்தம்பாலுற்ற தக்கபுலமை யில்லாக் கவிவாணரைச் சிறையி ட்டுவைத்து மகாநவமிபூஜை முடி த்து மறுநாள் விஜயதசமியில்அவர் களை வருவித்துச் சிலவினுக்களை வினுவித் தகுதியாக விடைதரா தார் தலையைவெட்டுதல் வழக்கெ ன்பது "இரண்டொன்றாத் தலை முடிந்து இறங்கப்போட்டு, வெட் டுதற்கோ கவியொட்டக் கூத்தனி ல்லை" என்பதனுல்விளங்கும். இவர் இராமாயணத்தின் உத்தரகாண்ட மும், ஈட்டியெழுபது எழுப்பெழு பது முதலிய சிலநூல்களுஞ் செய் தவர். தெய்வப்புலமையர். "கரண் டகண் டத்தோணிக் கஞ்சியமான் கருங்கண்குவிலே, திரண்ட வெள் ளத்துப் பிணமீதுசென்றனன்சேர் ந்தவனை, அரண்ட வின்பற்கொடு மீளக்கசாம் பற்ற வன்கொனுசால், குரண்டகன்னத்தி னுமைத்தனன்

காணன் குலோத்துங்கனே" எனக் கண்டசுத்தி பாடியவர்.

| | | |
|---|---|---|
| ஒப்பிலாநாயகி<br>ஒப்பிலாமுலையம்மை<br>ஒப்பிலாவம்பிகை | } | உமாதேவியா ருக்குமுறை யே திருநெடு |

ங்களம் - திருச் சோற்றுத்துறை - திருஆவடுதுறை இந்தக்ஷேத்திரங் களில் வழங்கும் திருநாமங்கள்.

ஒருசிறைப்பெயரியனுர் — நாஞ்சில் வள்ளுவனைப்பாடியபுலவர் [புறநா]

ஒருதுறைக்கோவை — நாணிக்கண் புதைத்தல் என்னும் ஒருதுறையி லேயே இரகுநாத சேதுபதியின் மேல், பொன்னங்காவிற் பிறந்த அமிர்த கவிராயர்பாடிய அரியநூல்

ஒருபாவொருபது — ஒருவகைப்பா வாற் பத்துப்பாடலை யுடைய ஒரு பிரபந்தம்.

ஒல்லையூர்கிழார் — தொடித்தலைவிழு த்தண்டினுராற் பாடப்பட்ட பெரு ஞ்சாத்தன் பிதா.

ஒல்லையூர் கிழான் மகன் பெருஞ்சாத் தன் — வீரர்க்கும் பாணர்க்கும் விறலியர்க்கும் பேருபகாரி. வலிய வீரன். இவனிறந்தபின்னர், குட வாயில் நல்லாதனுர், தொடித்தலை விழுத்தண்டினுர் பிரிவாற்றுதுபா டினர் [புறநா.]

ஒல்லையூர் தந்த பூதப்பாண்டியன் — போரில்வல்ல பாண்டியருளொரு வன். கவிசெய்தலில் திறமையுடை யோன். இவன் பெயர் பூதபாண்டி யனென்றும் வழங்கும். இவனுக்கு மையலென்னும் ஊரிலுள்ள மா வன், எயிலென்னும் ஊரினனான ஆந்தை, அந்துவஞ்சாத்தன், ஆதனழிசி, இயக்கனென்னுமிவர்கள் நண்பர்கள். இவனிறந்தவுடனே இவ

ன் மனைவி தீயிற் பாய்ந்திறந்தாள்

ஒழிவிலொடுக்கம் — கண்ணுடைய வள்ளலாரியற்றிய ஒரு ஞானநூல் இது சரியைக்கழற்றி கிரியைக்கழற்றி முதலிய பிரிவுகளையுடையது.

ஒன்பதாம்பத்து—எட்டுத் தொகையுளொன்றாகிய பதிற்றுப்பத்தில்ஒன்பதாவது. குடக்கோ இளஞ்சேரலிரும்பொறையைப் பெருங் குன்றூர்க்கிழார்பாடி முப்பத்தீராயிரம் பொற்காசுமுதலியன பரிசில் பெற்றது.

# ஓ

ஓணகாந்தன்—சிவபெருமானைக்காஞ்சிநகரத்திலே பூஜித்துப்பேறுபெற்றஓரசுரன். ஓணன் + காந்தனென்றிருவராகக்கூறுவதுமுண்டு.இப்பூஜை செய்தவிடமே திருக்கச்சி ஓணகாந்தன் றளி யெனப்படும். இது சுந்தரமூர்த்திசுவாமிகள் தேவாரம்பெற்றது.

ஓணகாந்தேசர்—திருவோணகாந்தன்றளியில் சிவபெருமானுக்கு வழங்குந்திருநாமம்.

ஓதலாந்தையார் — ஐங்குறுநூற்றில் பாலைத்திணையைக்குறித்த நான்காநூறுபாடியபுலவர்.

ஓய்மான்நல்லியக்கோடன் — கடையெழுவள்ளல்களிலொருவன். மாவிலங்கையென்னும் சிற்றூர்க்கரசன். பத்துப்பாட்டிலொன்றான சிறுபாணாற்றுப் படைக்குத் தலைவன். நன்னாகனாரால் பாடப்பெற்றவன்.

ஓய்மான்நல்லியாதன் — கொடையாளிகளிலொருவன். நன்னாகனாரால் புகழப்பெற்றவன்.

ஓய்மான்வில்லியாதன்—ஓய்மான் நல்லியக்கோடனுக்குப்பின் மாவிலங்கையி லரசுநடத்தியவன். நன்னாகனாரால் புகழப்பெற்றவன். ஒரு கொடையாளி.

ஓரம்போகியார் — ஐங்குறுநூற்றில் மருதத்திணையைக்குறித்தமுதனூறு பாடியபுலவர். புறநானூற்றில் இவர் பாட்டுமுண்டு.

ஓரி— கடையெழுவள்ளல்களிலொருவன். கூத்தர்க்கு நாடுகொடுத்தவன் இவன் குதிரையின் பெயரும் ஓரி.

ஓரேர்போகி—ஓரம்போகியார்.

ஓவியச்சேனன்—சித்திரசேனனென்னுங் கந்தருவனுக்கு நாமாந்தரம். கந்திற் பாவையி லதிட்டித்திருக்குந் துவதிகனென்னுந் தெய்வத்தினுடைய நண்பன் [மணி]

ஓவியம் — ஓவியநெறிகளை விளக்கிக் கூறுநூல். இது சங்கத்திலிருந்து பின்னர்மறைந்தது.

ஓஷதீசன்—ஓஷதி [மருந்து]கட்கதிபனான சந்திரன்.

# ஔ

ஔசனபுராணம்—உபபுராணம் பதினெட்டனுளொன்று. உசனமுனிவரால் சொல்லப்பட்டது.

ஔதேயர் — உசீநரன் புதல்வனான திருகன் மரபிலுதித்தோர்.

ஔர்வன் — (1) ஊர்வன் புத்திரன். சுவாலாமாலி யெனவும் பெயருடையான் [ஊர்வனிற்காண்க] (2). சியவனனுக்கும் மனுகன்னிகைக்கும்பிறந்தவோரிருடி. இவனுக்கு இருஷிகன் முதலாகநூறுபுத்திரரிருந்தனர்.

ஔவையார்--நல்லிசைப்புலமைமெல்

வியலாருண் மேம்பட்டவர், தெய்வ பக்தியும் அற்புதமகிமையுமுடையவர், இவர் பிதா பகவனென்னும் வேதியன். தாய் ஆதியென்பாள் பாணர் சேரியில் வளர்ந்துவயதடைந்தவர். பிறந்தபொழுதேதாய் தந்தையர் நியமனப்படி சிசுவைப் பிரியமாட்டாது வருந்துகையில் "எவ்வுயிருங்காக்க வோரீசனுண்டோ வில்லையோ, அவ்வுயிருள் யானுமொன்றிங் கல்லேனோ- வவ்வி, அருகுவது கொண்டிங் கலைவானேனன்றாய், வருகுவதுதானேவரும்" எனக்கூறி அவரைத் தேற்றிவிடுத்தவர். இவருடன்பிறந்தோர் அதிகமான், திருவள்ளுவர், கபிலரென மூன்றுசகோதரரும், உப்பை உறுவை வள்ளியென மூன்றுசகோதரிகளுமாவர். இவர் தமிழ்நாடு முழுவதுஞ் சஞ்சரித்துப் பற்பல அமையங்களிற் பற்பல தனிக்கவிகளால் பற்பல அற்புதங்கள் செய்தவர்.

இவராற் பாடப்பட்டோர் அதியமான் நெடுமானஞ்சி, அதியமான் மகன் பொகுட்டெழினி, தொண்டைமான், நாஞ்சில்வள்ளுவன், சேரமான் மாவெண்கோ, பாண்டியன் கானப்பேர்தந்த உக்கிரப்பெருவழுதி, சோழன் இராஜசூயம் வேட்ட பெருநற்கிள்ளி முதலியோரநேகர். அதியமான் நெடுமானஞ்சி தனக்குக்கிடைத்த கருநெல்லிக்கனியை உண்டோர் நெடுங்காலஞ் சீவித்திருப்பரென்ப துணர்ந்தும் தானதனையுட்கொள்ளாது இவரிடத்துள்ள அன்பினால் கொடுக்கவுண்டு நெடுங்காலஞ்சீவித்திருந்தவர் இதனைப்புறநானூற்றில் இவர்பாடலிலும், நெடுநல்வாடையிலும் காணலாம். அதியமான் நெடுமானஞ்சியினிடத்துள்ள அன்பினால்தொண்டைமானிடந் தூது சென்றவர். இவர் உக்கிரப்பெருவழுதி காலமுதல் கம்பர் காலம்வரையில் அநேக நூற்றாண்டுகள் சீவித்தவரென்றறியப்படுகிறது.

இவரியற்றியநூல்கள் ஆத்திசூடி கொன்றைவேந்தன் மூதுரை நல்வழி அசதிக்கோவை பந்தனந்தாதி ஞானக்குறள் முதலியன. அன்றியும் எட்டுத்தொகையுள் சிலவற்றில் பலசிலபாடங்களும் அவ்வவ்வமயங்களிற் கூறிய எண்ணிறந்த தனிச்செய்யுட்களும் இவர் பெயராலே விளங்கும். இவர்வாக்குவிசேடத்தானே தொண்டைநாட்டில் சுரக்குங்கிணறு இன்றளவும் அங்ஙனமே யுள்ளது.

## க

ககந்தன்—காந்தனென்னும் அரசனுடைய காவற்கணிகையின்மகன். அவ்வரசன் தன்னோடு போர்புரியவந்த பரசுராமற்குத்தோன்றாது ஒளித்துக்கொண்டபொழுது அவர் கட்டளையாற் காவிரிப்பூம்பட்டினத்திலிருந்து அரசுகடாத்தியவன். தன்புதல்வரிருவரில் மூத்தோன் வணிகமாதாகிய விசாகையையும், இளையோன் பார்ப்பனியாகிய மருதியையும் விரும்பித் தீங்கிழைப்பமுயன்றாரென்பதுணர்ந்து அவரை வாளாற்றடிந்தவன். இவனாற்காக்கப்பட்டமையின் அந்நகரம் காகந்தியென்றும் பெயருற்றது.

ககமுகன்—சகஸ்ரபாதனுடன் ஸம

மாக அத்தியயனஞ்செய்தவன்.

ககுத்மி--அநுமரபிலுதித்தரைவதன் புத்திரன். தன்மகள் ரேவதிக்கு நாயகனைத்தேட அவளோடுங்கொண்டு பிரமசபையையடைந்து ஆடல்பாடல்களைச் சிறிதுநேரம் பார்த்துக்கொண்டிருந்து, அவ்விடயத்தைப் பிரமனுக்குணர்த்த, பிரமன் நீ பொழுதுபோக்கிய காலம் நிலவுலகத்தில் இருபத்தேழு சதுர்யுகங்கள் கழிந்தமையின் உன்னையறிந்தோர் அங்கொருவருமிலர். ஆதலின் ஆதிசேஷாவதாரமாகப் பலராமனுதித்தனன் அவனுக்கு உன்மகளைத் தருகவென, அங்ஙனமே பூலோகமடைந்து பலராமனுக்கு மணஞ்செய்துகொடுத்தவன்.

ககுத்தர்—புத்தர்கள் இருபத்தேழுவரில் இருபத்தைந்தாவதாகத்தோன்றியவர். [மனைவி.

ககுபுதேவி—தக்ஷன்மகள். தருமன்

ககுபை—ஒருமலை. ஓட்டிரதேசத்திலுள்ளது. [ளைவல்.

ககுவன் — யதுமரபினன். கம்சனுக

ககுஸ்தன் — இக்ஷ்வாகுபௌத்திரன் மகன். இவன் பிதா விகுக்ஷி. இவன் திருமால்விருப்பின்படி இந்திரன் இடபரூபமேற்று முதுகிற்றாங்க, அசுரருடன் போர் புரிந்து வென்றவன் [ககுஸ்தம்=முசுப்பு.] இந்திரன் ககுஸ்தத்தில் ஏறினமையின் ககுஸ்தனெனப்பட்டனன்.

ககேந்திரன்—கருடன் (பக்ஷிகளுக்கரசன்.) [ரோசனுக்கிளைவல்.

கங்கணன்—யதுமரபிலுதித்த நிம்ம

கங்கன்—(1) யதுமரபிலுதித்தவசுதேவன் தம்பி. (2) சம்பாதிவமிசத்துப் பக்ஷிராசன். (3) யமன். (4) ஒருமுனிவன். அவன் மனைவி பிரமலோசை (5) தருமனுக்கு அஞ்ஞாதவாசத்தில் வழங்கியபெயர். (6) நன்னூல்செய்வித்தவன். சீயகங்கனென்றும் இவன் பெயர்வழங்கும்.

கங்காதாரணமூர்த்தி-சிவமூர்த்தங்கள் அறுபத்துநான்கனுளொன்று. ஒருகாலத்தில் சிவபிரானுடன் பூஞ்சோலையிலுலாவிக்கொண்டிருந்த உமாதேவி ஓர்விளையாடல் கருதித் தமதுகரத்தால் இருவிழிகளையும் பொத்த உலகெங்கும் இருண்மயமாகவே, அம்மையார் அச்சத்தால் அக்கரங்களையெடுக்கையில் விரல்கள்பத்திலும் வெயர்வுதோன்றிப் பத்துக்கங்கைகளாகிச் சத்தசமுத்திரங்கட்கு வழிக்கொண்டமையின், தேவர் இருடியர் முதலியோர் இறைவனைப்பணிய. இறைவன் அக்கங்கையைச் சிரமிசையணிந்தனர். உமாதேவி திருக்கரத்திலுதித்தமையானும் சிவபெருமான் சடைமேலணிந்துகொண்டமையானும் அக்கங்கையிற் சிறிது சிறிது பிரமன் திருமால்முதலியோர் தங்கட்குலகிற்குக் கொண்டுசென்றனரென்பது புராணசரிதம்.

கங்காதித்தன் — துவாதசாதித்தரிலொருவன். பகீரதன் கங்கையைப்பூமிக்குக் கொண்டுவருகையில் அருகிலிருந்தவன்.

கங்காத்துவாரம்—திருமால்வாமனவதாரங்கொண்டு தமதுஅடியைமேலேதூக்கியபோது அது அண்டமுகட்டிற்பட்டு அங்கிருந்த ஆகாயகங்கை அத்திருவடிவழியே யொழுகியவிடமென்றும், இதனை அரித்துவாரமென்றுஞ் சொல்லுவர் அங்

னிர் மாளவதேசமூலமாய் மேற்குக் கடலில்சங்கமமாயது [சிவரகசியம் நதியாம்சம். ஹிமவானுக்குப் பூலோகவிசேட்டங்காட்டிய கட்டத்திற் கூறப்பட்டது]

கங்காபுத்திரன்—(1) முருகக்கடவுள். (2) வீடுமாசாரியர் (3) வேளாளர்

கங்காவிசர்ஜனமூர்த்தி—சிவப்பிரசாதமாகப் பிரமன் தனது மனோவதிநகரிற்குக்கொண்டுசென்ற கங்கையைப் பகீரதன் தவத்திற்கிரங்கி விடுக்கையில், அக்கங்கை வேகத்தைத் தாங்கவல்லவர் சிவபெருமானே யெனத்தணிந்து தவஞ்செய்து வேண்ட, அப்படியே அதனை யேற்றுச் சிரமிசையணிந்து அவன் வேண்டுகோளுக்காகச்சிறிது விடுத்த அவசரம். இது அஷ்டாஷ்ட மூர்த்தங்களிலொன்று.

கங்காளமூர்த்தி — சிவமூர்த்தங்களிலொன்று. வாமனனது முதுகெலும்பைப்பறித்துத் தோண்மேற்றாங்கியவர் [கங்காளம்=முதுகெலும்பு]

கங்கை— (1) பாவகராஜகுமாரி (2) பகீரதன்தவப்பயனால் தேவலோகத்திருந்துவந்த ஒருபுண்ணியநதி. இது சகரசக்கரவர்த்தியின் மக்களாய தன் மூதாதைகள் அறுபதினாயிரவர் கபிலமுனிவர்கோபத்தால் சாம்பராய் நரகவாதனை துய்த்திருந்தமையின், அவரை நற்கதியிலுய்ப்பக் கொண்டுவரப்பட்டதென்பர். இது பகீரதனாற்கொண்டுவரப்பட்டமையின் பாகீரதியென்றும், வழியில் ஜன்னுமுனிவர் தம்யாகத்தை அழிப்பதாயிருந்தமையின் அதனையுட்கொண்டுபின் பகீரதன் விருப்பால்ஜன்னு [காது] வழியில் விடுத்தமையின் ஜானவியென்றும் காரணப்பெயர் வழங்கும். (3) கங்காநதியின் அதிதெய்வமானகங்கை. இவள் பிரமசாபத்தால் சந்தனு பாரியானவள் [சத்தியவதியிற்காண்க] (4) உக்கிரசேனன்மகள். கங்கன் மனைவி.

கங்கைக் கரையில் தச்சயன் மனைவிமாருடன் தங்கியிருக்கையில் பாதபங்கயமலையைத் தரிசிக்க வந்த அறவணவடிகள் கண்டு அம்மலையைத் தரிசிக்கும்படி அவனுக்குக் கூறினர். கண்ணகிவடிவஞ்சமைத்தற்குக்கற்கொணர, சேரன் செங்குட்டுவன் இமயமலைக்குச் சென்றபொழுது, நால்வகைச்சேனையோடும் இக்கரையிற்றங்கினன். [மணிமே]

கசன்—பிருகஸ்பதி புத்திரன் இவன் மிருதசஞ்சீவி மந்திரங்கற்க, சுக்கிரனிடஞ் சீடனாயிருக்கையில், சுக்கிரன் மகள் தேவயானை அவன் மீது காதல்கொண்டமையுணர்ந்த அசுரர் இவனைக்கொல்ல, தேவயானை தன்நண்பனைக்காணாது பிதாவை வினவ, சுக்கிரன் தனதுஞானத்தால் அவனிறந்தமையுணர்ந்து மந்திரபலத்தாலெழுப்பவுயிர்பெற்றெழுந்தான். அசுரர் அதனையுணர்ந்து கடுங்கோபங்கொண்டு சமயம் பார்த்து மீண்டுங்கொன்றுசாம்பர்செய்து கள்ளிற்கலந்து புதுமது வென்று சுக்கிரனுக்கு அருத்தினர் மீண்டும் தேவயானை அவனைக்காணாது தந்தையை வினவ, சுக்கிரன் விஷயத்தை யறிந்து தன்வயிற்றிலிருந்த கசனுக்கு மந்திரத்தையுபதேசித்துக் கூவியழைப்ப, சுக்கிர

னுடைய வயிற்றைப் பீறிக்கொண்டு வெளியேவந்து தன்னுலிறந்த சுக்கிரனையெழுப்பி, சுக்கிரன் பால்விடைகேட்டுப் பெற்றுக்கொண்டபொழுது,தேவயானை "யானுன்னை மணம்புரிய விரும்பினமையின் நீ செல்லப்படாது" எனத்தடுக்க, கசன்மறுக்க, தேவயானை "நீபெற்றமந்திரம்பலியாதொழிக" எனச்சபிப்ப, கசன் "யான்பிறருக்குபதேசித்தால்பலிப்பதாக, நீபிராமணகுலத்தில் மணம் பெறுயாக" எனப்பிரதிசாபமிட்டுச்சென்றவன் தேவயானை இது காரணமாகயயாதியை மணஞ்செய்துகொண்டனள். சுக்கிரன் வேதியர் சுராபானஞ்செய்யப்படாதென விலக்குநியமித்தனன்

கசியபன்—(1)மரீசிக்கு ஒருகலையாலுதித்தவன், பிரஜாபதிகளி லொருவன்,தக்ஷன்புதகிரிகளில்,அதிதி திதி-தநு-மநி-சுரபி-குரோதவசை விநதை-தாம்பசை-கதை-க்த்தரு-சுதை-அருட்டை-இலையெனப்படும் பதின்மூவரையும், வைசுவாநரன் புத்திரிகளில் காலை - புலோமை யெனப்படும் இருவரையும் விவாகஞ்செய்து கொண்டவன்.

இம்மனைவியரில், அதிதியிடம் ஆதித்தரும், திதியிடம் தைத்தியரும், தநுவிடம்தானவரும்,பிறரால் அண்டஜம் சுவேதஜமுதலியஉலக சிருட்டிகளும்உண்டாயின. இவ்விரிவெல்லாம்அவ்வவர் பெயர்ாலுள்ளசிறப்பு வரிகளிற்காண்க. காலையால் காலகேயரும், புலோமையால் பௌலோமரும் பிறந்தனர் இக்கசியபனுக்கு பர்வதன் விபண்டகனென்றும்இருபுத்திரர்களுளர்

(2) பரசுராமர் செய்த அசுவமேதயாகத்திற் பூமிமுழுவதையும்வாங்கி வேதியருக்குத் தானஞ்செய்த ஓர் முனிவன். (3) வசுதேவன் புரோகிதன்.(4) ஒருபுராணிகன். (5)சிற்பநூலாசிரியன். (6) புத்தர்கள் இருபத்தெழுவரில் கடைசியாகத் தோன்றியவர்.

கச்சயம்—துச்சயராஜன்இராஜதானி இது அங்கநாட்டுள்ளது.

கச்சன்—காசிராசன்.

கச்சி—காஞ்சிநகரம்.

கச்சியப்ப சிவாசாரியர்— காஞ்சியிற் குமரகோட்டத் தருச்சகராயிருந்த ஆதிசைவர். இவரே கந்தபுராணத்தைத் தமிழில்மொழிபெயர்த்தவர் உற்பத்திகாண்டமுதல் தக்ஷகாண்டமீறாக ஆறுகாண்டங்களை யுடையது. இதன் தொடர்ச்சியான உபதேசகாண்டம் கோனேரியப்பநாவலராலியற்றப்பட்டது.

கச்சியப்ப முனிவர் — திருவாவடுதுறைச்சிவஞான யோகிகள் மாணக்கருண்முதன்மையர். வேளாண்குலத்துதித்தவர்.காஞ்சிபுராணப்பிற்பகுதி, விநாயகபுராணம், பேரூர்ப்புராணம், தணிகைப் புராணமுதலியன இயற்றியவர்.

கச்சிருமன்—விப்பிரசித்தியின்மகன்

கஜகர்ணன் — ஓரியக்கன்.

கஜமுகாசுரன் — (1) யானைமுகத்தோடுதித்த ஓரசுரன். இவன்தேவர் மாநுடர் மிருகங்கள் பலபடைகள் முதலியவற்றாலிறவாவரம்பெற்றவன். விநாயகக்கடவுளால் வெல்லப் பட்டவன். இவனைக் கண்டோர் தலையில் குட்டிக்கொண்டு

தோப்பணம் போடுதல் வழக்கம். இவன்பெருச்சாளி வடிவாய் விநாயகர்வாகனமாகி, தனக்குச்செய்து வந்த மரியாதையை விநாயகக்கடவுளேற்கும்படி வரம்வேண்டிப்பெற்றவன் (2) ஆயிரமுகமும் இரண்டாயிரங்கையுங் கொண்டு சூரபன்மனுடைய மகேந்திரபுரியை ஆகாயவழியிற் காத்திருந்து வீரவாகுதேவராற்கொல்லப்பட்டஅசுரன்.

கஜயுத்தமூர்த்தி — கஜாசுரனென்னும் யானை வடிவேற்ற அசுரன் தேவர்களைத் துன்புறுத்த, சிவபெருமான் அவனைக்காலாலுதைத்துத் தள்ளிச்சருமத்தையுரித்துத் தமதுடலிற்போர்த்தனர். இது திருப்பழூரிலும்காசிமணிகர்ணிகையிலும் நிகழ்ந்ததாக நூல்கள் மாறுபடக்கூறுவது கற்பபேதமென்பர்.

கஜன்—ஒரு ராக்கதன் - தாரகயுத்தத்திற் கொல்லப்பட்டவன்.

கஜாசுரன் — யானை வடிவாயிருந்த ஓரசுரன் - சிவபெருமானால் உரித்துக்கொல்லப்பட்டவன். கஜயுத்தமூர்த்தியிற்காண்க.

கஜாந்திகமூர்த்தி—அஷ்டாஷ்டமூர்த்தங்களிலொன்றான சிவமூர்த்தி. பானுகோபனாற் கொம்புகளிழந்த இந்திரனுடைய ஐராவதத்தின் அன்புக்கிரங்கி, அதன் கொம்புகளையும் வன்மையையும்மீண்டும் அநுக்கிரகஞ்செய்தனர். இது திருவெண்காட்டில் நிகழ்ந்ததாகக் கந்தபுராணங் கூறும்.

கஜானனன்—(1)கணபதியிற்காண்க (2) ஸ்ரீ வைகுண்டத்தில் திருமாலின் அநுக்கத்தொண்டராய ஒரு சேனாநாயகன்.

கஜேந்திரன்—இந்திரத்துய்மனென்னுமரசன் அகத்திய முனிவரைக் கண்டு பணியா திருந்தமையின், அவர் சினந்து யானையாகவென்று சபிக்க, அங்ஙனமே யானையாகித் தன் இயற்கையான விஷ்ணுபக்தியோடு யானைகட்கரசாய் அநேக கரிணி [பெண்யானை]களோடு ஜலக்கிரீடை செய்துகொண்டிருக்கையில்; சாபத்தால் முதலை வடிவேற்றிருந்த ஊஊவென்னுங்கந்தர்வன், யானையின்காலைப் பற்றியீர்க்க, அநேககாலம்இரண்டும்போர்புரிந்து யானைசகிக்கமுடியாது ஆதிமூலமேயென்று திருமாலைக்கூவ, திருமால் ஆண்டெய்திச் சக்கரத்தால் முதலையைச் சங்கரித்துக் காத்தனர். யானைவடிவுமுதலைவடிவும்விலகி இருவரும் பண்டைய நிஜவடிவேற்று முத்தியடைந்தனர். அவருள் யானை வடிவேற்ற விவர் கஜேந்திராழ்வாரெனப்படுவர்.

கஞ்சன்—(1)பிரமன் (2, கண்ணனாற் கொல்லப் பட்டவன். கம்சனிற் காண்க.

கஞ்சி — காஞ்சிபுரி. இது தொண்டைநாட்டிலுள்ளது. சத்த புரிகளிலொன்று.

கடகம் — ஒரு நகரம். இதனிடத்திலேயே கிருஷ்ணமூர்த்தியின்சமாதியாகிய ஜகந்நாதமுள்ளது.

கடகர்ப்பர் — விக்கிரமார்க்கனுடைய அவைக்களத்திலிருந்த நவரத்தினமென்னும்பட்டம்பெற்ற ஒன்பது புலவர்களிலொருவர். இவர் கடகர்ப்பரகாவியமெனும் வடநூலொன்றியற்றியுளர்.

கடந்தைநாயகி —திருத் தூங்கானை

மாடத்தில் உமாதேவி திருநாமம் கடல்பிறக்கோட்டியசெங்குட்டுவன்- எட்டுத் தொகையு ளொன்றாகிய பதிற்றும் பத்தில் ஐந்தாம்பத்திற் குத்தலைவன். இவன் தன்னைப்பாடிய பரணர்க்கு உம்பர்காட்டு வருவாயையும், தன்மகன் குட்டுவன் சேரலனையும்பரிசிலாகத்தந்தவன் ஐம்பத்தையாண்டு வீற்றிருந்தான.

கடியநெடுவேட்டுவன்—வேடர் தலைவன் கோடைமலைக்கரசன். பெருந்தலைச் சாத்தனாரால் பாடப்பெற்றவன்.

கடியலூர் உருத்திரங்கண்ணனார் — எட்டுத் தொகையு ளொன்றாகிய பத்துப்பாட்டில் பெரும்பாணாற்றுப்படையும் பட்டினப்பாலையுமியற்றிய ஆசிரியர். கடைச்சங்கப் புலவருளொருவர். [வர்.

கடேந்திரநாதர்— நவசித்தருளொரு

கடைச்சங்கம் —இதுவேமூன்றாவது சங்கம். இதனைப்பற்றிய விவரங்களை—"பருங்கடைச் சங்க மிருந்தோர் யாரெனில், சிறுமே தாவியார் சேந்தம் பூதனார், அறிவுடையானார் பெருங்குன் றூர்கிழார், பாடல்சான்ற விளந்திருமாறனை, கூடலாசிரியர் நல்லந் துவனார், பரவு தமிழ் மதுரை மருதனிள நாகர், அவிர்கணக் காயர் நவினக் கீரர், கீரங்கொற்றர் கிளர்தேனூர்கிழார் ஒருங் கலைமணலூரா சிரியர், நல்லூர்ப்புளியங் காய்ப்பெருஞ் சேந்தர், செல்லூராசிரியர்முண் டம்பெருங் குமரர், முசிறியா சிரியர் நீலகண்டனார், அசைவிரிகுன்றத்தாசிரியாண்பி, நாத்தலங்களிக்குஞ் சீத்தலைச் சாத்தனார், மூப்பூ லுணரு முப்பூரி குடிகிழார், உருத்திர சன்மர் மருத்துவ ராகிய, நாம நாற்கலைத் தாமோ தரனார், மசதவளனுரோ டோதுமிள நாகர், கடியுங்காமப் படியங்கொற்றனார், அருஞ்செயி லூர்வாழ் பெருஞ்சுவ னாருடன், புவிபுகழ் புலமைக் கபிலர் பரணர், இன்னுந் தடிந்த நன்னாகனாரியும், தொல்காப்பெருமைத்தொல்காப்பியத்துக்,குறையிடையிட்ட விரகர்கலவாடர், பேர்மூலமுணரு மாமூலர் தம்மொடு, விச்சை கற்றிநெச்செள்ளை யார்முதல், தேனூற்றெடுப்பச் செந்தமிழ் பகர்ந்தோர், நானூற் றுவர்முத னாற்பத்தொன்பதின்மர்,—

"பீடுபெற வுலகிற்பாடிய செய்யுள், முத்தொள் ளாயிர நற்றிணை நெடுந்தொகை, அகநானூறு புறநானூறு, குறுந்தொகை சிற்றிசை பேரிசை வரியோ, டறம்புகல்பதிற்றுப்பத் தைம்பதோ டிருபான், பெறும்பரி பாடலுங் குறுங்கலி நூற்றைம், பதுமுத லாகிய நவையறுங் கலைகள், அக்கா லத்தவர்க் ககத்திய மதனொடும், மிக்கா மிலக்கணம்விளங்குதொல்காப்பியம்—

"எண்ணூற் கேள்விய ரிருந்ததாயிரத்துத், தொளாயிரத் தைம்பது வருடமென்ப,—

"இடர்ப்படாதிவர்களைச்சங்கமிரீஇயினார்,முடத்திருமாறன்முதலாவுக்கிரப், பெருவழுதி யீறாப் பிறங்குபாண் டியர்கள், ஈரறுதிளாகு நாற்பத்தொன் பதின்மர், இவருட் கவியரங் கேறினர் மூவர்,—

"புவியிற் சங்கம் புகழ்வட மதுரை, ஆதிமுச் சங்கத் தருந்தமிழ்க்

கவிஞர், ஓதிய செய்யு ளலவாப் பெரும்பொருள், வாளாக்கேட்குந் தோளாச் செவிக்கும், கேட்டுக்தெரியா கோட்டைநெஞ் சினுக்கும், நுழையாவா சவி ஞுழைபுலன நன்னுடும், விழைவார்க் குரைக்கவேண்டுவர் தெரிந்தே, — என்னும் ஆசிரியத் தானறிக. அகலம் வல்லார்வாய்க் கேட்டுணர்க.

கடோற்கசன — வீமனுக்கு இடும்பியிடம் பிறந்தவன். கர்ணன இந்திரன்பாலுற்ற ஒருசக்தியால் பாரத யுத்தத்திற் கொல்ல இறநதவன். அளாயுதனைக்கொன்றவன. இவன மகன் அஞ்சனவர்மன்.

கடோற்காதித்தன் — பன்னிரு சூரியரு ளொருவன். சத்துரு சூரியவொளிக்குப் பயந்து கடோற்கமென்றதால் இப்பெயரேற்றவன்.

கட்கநேத்திரதேவியார் — திரு ஆக்கூரில் உமாதேவியார் திருநாமம்.

கட்டியங்காரன—சச்சந்தன் மந்திரி. இவனே சச்சந்தனைக் கொன்று இராசமாபுர இராச்சியத்தைக்கவர்ந்துகொண்டவன் [சீவக] .

கட்டுவாங்கன்— இக்ஷ்வாகுவமிசத்து விசுவாசகன் புத்திரன்-தீர்க்க வாயுவுக்குப்பிதா. தேவாசுரயுத்தத்தில்தேவர்கட்குதவிசெய்து களிப்பூட்ட, அவர்கள் வரங்கேட்க வேண்டுமாயிற் கேட்க என, தன்வயதை வினவி முகூர்த்தமொன்றெனறுணர்ந்து மோக்ஷசாதனஞ் செய்து மோக்ஷம் பெற்றவன்.

கணதரர்—ஒராருக குரு.

கணநாதநாயனார்—அறுபான்மும்மை நாயன்மார்களு ளொருவர், இவர் ஜனனபூமி சீகாழி.குலம்பிராமண குலம். அடியவர் பத்தி சிவபத்திகளிற்சிறந்து திருஞானசம்பந்தமூர்த்தி சுவாமிகளிடத்தில் அன்புசெலுத்திச் சிவகணத் தலைவரானவர்.

கணபதி—சிவபெருமானு ருடைய மூத்தகுமாரர். பிரணவஸ்வரமாகச் சித்திரித்த யானையினிடஞ் சிவசரிசமாகத் தோன்றியவர். "முராரியாதிய தேவர்கண் முதலூற முழுதுலகினிலுள்ளோர், விராவி யாதொருகாரியமாயினும் விளக்குறச் செயவென்றே, பராவி யுன்னருச்சனைசெய்வோர் மனத்துறு பான்மைதக் தருளுன்னன், பிராது செய்பவர் காரிய மூறுசெய் திடுதியென்றிவை சொன்னான்" என்றபடி இத்தகையவரத்தைச்சிவபிரானால் அளிக்கப்பெற்றவர். பிரதம மகா சிருஷ்டியில் சிவமூர்த்தியின் கண்டத்திலுதித்து, தேவர் மானுடர் முதலியோர்க்குத் தலைவராக முடிசூட்டப்பெற்றவர்.

மிருக தேவ பூத அங்கங்களோடுதித்துக்கஜமுகாசுரனைப்போரில் வென்றுவாகனமாகக்கொண்டவர்.

அகத்தியர்கவேரபர்வதத்திலிருக்கையில் அவருடையகமண்டலத்திலிருந்த கங்கையை இந்திரன் வேண்டுகோளால் அவன் சீகாழியிலேயமைதத நந்தவனஞ் செழிக்கக் காகவுருவேற்றுக்கவிழ்த்தவர்.

குமாரக்கடவுள் வள்ளிநாயகியாரை மணமுடிக்கும் பொருட்டு யானை வடிவேற்று அச்சுறுத்தியவர். இக்காரணத்தால் மும்மதன் எனப் பெயரேற்றவர்.

சிவப் பிரசாதமாக இராவணன் இலங்கைக்குக் கொண்டு சென்ற